# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 40 திருவள்ளுவர் ஆண்டு 2054 செபுதம்பர் – 2023

## உள்ளே...


- கான்துறைக் கலைச்சொற்கள்!
- வானை அளப்போம்! கடல் மீனை அளப்போம்!
- செந்தமிழ் வளர்த்த ஈழத்து மூதறிஞர் வரலாறு – ஓர் பன்முகப் பார்வை!
- ஒட்டுவாரொட்டி!
- முதுகுளம் – அதைச் சுற்றியுள்ள ஊர்களின் காரணப்பெயர்கள்
- ஒரு குறளில் ஐந்து வேற்றுமைகள்!
- இயக்ககச் செயற்பாடுகள்!
- பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!











## கான் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Afforestation | – | கான் வளர்ப்பு |
| Arboratum | – | மரக் காட்சியகம் |
| Arboriculture | – | மரவளர்ப்புக் கலை |
| Broadcast sowing | – | தூவி விதைத்தல் |
| Burrow pits | – | மண்ணெடுத்த குழிகள் |
| Dibbling | – | விதை ஊன்றுதல் |
| Direct sowing | – | நேரடி விதைப்பு |
| Dry forest | – | உலர்கான் |
| Edaphology | – | மண்ணாய்வியல் |
| Forest act | – | கான் சட்டம் |
| Forest floor | – | கான் தளம் |
| Forest geneticist | – | கான் மரபியலறிஞர் |
| Forest guard | – | கான் காப்பாளர் |

| | | |
|---|---|---|
| Forest industries | – | கான்சார் தொழில்கள் |
| Forest produce | – | கான் பொருள் |
| Forest silviculture | – | கான்மர வளர்ப்பியல் |
| Forest working plane | | கான் வளர்ச்சித் திட்டம் |
| Hypsometer | – | மர உயரமானி |
| Mountain forest | – | உயர்மலைக் கான் |
| Park national forest | – | தேசிய கான் பூங்கா |
| Seed dormancy | – | விதைத் துயில் |
| Silvics | – | கான் மரவியல் |
| Soil auger | – | மண்துளைக் கருவி |
| Soil pit | – | மண் ஆய்வுக் குழி |
| State silviculturist | – | மாநில கான் இயலர் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 மடங்கல் (ஆவணி)

செபுதம்பர் – 2023



ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# வானை அளப்போம்! கடல் மீனை அளப்போம்!

உலக நாடுகள் பலவும் இந்நாளில் விண்கலங்களை நிலவுக்கும் செவ்வாய்க்கும், ஏன்... சூரியனுக்கும் செலுத்தி ஆய்வு செய்துவரும் நிலையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் முன்னோர்கள் வானியல் அறிவைப் பெற்றிருந்தனர் என்பது நமக்கு எத்தகைய பெருமிதம். பழந்தமிழர் மண்ணை ஆய்ந்தது போல விண்ணையும் ஆய்ந்தனர். சூரியன், நிலவு, உடுக்களின் இயக்கங்களையும் செலவினையும் நுட்பமாக நோக்கி அறிந்தனர். தமிழர்தம் வானியல் அறிவு தனித்துவம் வாய்ந்தது. இயற்கையாக ஒளி பெற்ற கோள்களையும் சூரியனிடமிருந்து ஒளிபெறும் மீன்களையும் கண்டறிந்து நாள்மீன், கோள்மீன் என்றனர்.

"நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோள்மீன் போல"

என்ற பட்டினப்பாலை அடிகள் விண்மீன்கள் பற்றி அழகாகக் கூறுகின்றது. அதுபோல வெள்ளி என்னும் கோள் வடதிசை ஏகினால் மழைவரும் என்றும், தென்திசை ஏகினால் மழையின்மை என்றும் நன்கறிந்திருந்தனர். மேலும் சூரியனிடமிருந்து சிதறும் துகள்களே எரிகற்கள் என்பதையும் அறிந்திருந்தனர். இதனை "வெங்கதிர் கனலி துற்றவும்" என்ற புறநானூற்று வரியால் அறியலாம்.

புறநானூற்றின் முதற்பாடலே "நிலவின் இளம்பிறை" என்று வான் பெயரால் தொடங்குகிறது. கடைசிப் பாடலான "மாவிசும்பின் வெண்திங்கள் மூவைந்தான் முற்ற" என வானத்தையும் நிலவின் கலையையும் குறிப்பதாக அமைகிறது. அது மட்டுமல்லாமல் சொல்லோவியமாம் சிலம்பும் "திங்களைப் போற்றுதும், ஞாயிறு போற்றுதும்" என்றுதான் தொடங்குகிறது. நம் முன்னோர்கள் வானியலை அடிப்படையாகக் கொண்டே நாட்காட்டியைப் பயன்படுத்தினர்.

மக்கள் நாள்கோள்களின் நிலையை ஆய்ந்தறிந்து வினை மேற்கொண்டனர். கோள் நிலையில் தீமை விளையாத நல்ல நாளினை அறிந்து அந்நாளை மங்கல நிகழ்வுக்குரிய நாளென்றனர். வானை உற்றுநோக்கி ஆய்ந்து அன்றைய நாளின் செயல்பாடுகளை அமைத்தனர் நம் சங்கச் சான்றோர்கள். பொழுது புலரும் விடியற்காலத்தில் வெள்ளிமீன் தோன்றும் என்றும், அது எந்த அளவுக்கு மழையுடன் தொடர்புடையது என்றும் உணர்ந்து கூறினர். தமிழர்களது நாட்காட்டியில் சூரியன் பன்னிரு ஓரை(இராசி) மண்டலங்களில் முதலான (மேழவோரை) நுழையும் நாள் சித்திரை முதல் நாளாகக் கொள்ளப்படுகிறது. அடுத்தடுத்த ஓரை மண்டலங்களில் செஞ்ஞாயிறு செலவிடும் நாள்கள் மாதங்களாகின்றன. சித்திரை மாதத்தில் முழுநிலவு நாளில் சித்திரை விண்மீன் அருகே நிலவு தோன்றும். இதுவே சித்திரை முழுநிலவு நாள் (சித்ரா பௌர்ணமி) எனக் கொண்டாடப்படுகிறது. இதைப் போலவே வைகாசி விசாகம், தைப்பூசம், கார்த்திகைத் தீபம், பங்குனி உத்திரம் என விண்மீன்களுடன் தமிழர்கள் தம் திருவிழாக்களைப் பாங்குடன் கொண்டாடினர். கோள்களின் நகர்வை நன்கு உற்றுநோக்கி குறிப்பிட்ட நாள்களில் சூரியக் கதிர்கள் கருவறைக்குள் விழுமாறு திருக்கோவில்களை அமைத்துள்ளனர். இது தமிழரது வானியல் மற்றும் கட்டடக் கலை நுட்பத்திற்குச் சிறந்த சான்றாகும்.

தொன்மங்கள் மரபுவழித் தொடரும் என்பர். அதுபோல் வானியல் நம் சங்கச் சான்றோர்கள் பயணித்த, கண்டறிந்த பட்டறிவினைத் தொடர்ந்து இன்று நிலவின்

தென் துருவத்தில் தடம் பதித்த முதல் நாடாக இந்தியா உள்ளது. சந்திரயான் – 3 விண்கலம் குறித்த இலக்கையெல்லாம் விஞ்சி புதிய வெற்றி பெற்றுள்ளது. விரிந்த வானம் எல்லையற்றது என உணர்ந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் வான் தந்த பாடமாக,

" எத்தனை பெரிய வானம்
எண்ணிப்பார் உனையும் நீயே
இத்தரை கொய்யாப் பிஞ்சு
நீ அதில் சிற்றெரும்பே"

என்றார். ஒரு பொத்தலில் வீட்டுக்குள் வருகிற சூரிய வெளிச்சத்தில் அணு போன்ற தூசிகள் அலைந்து திரிவது தென்படுகிறது. அது போன்றுதான் வானத்தில் கோளங்கள் மிதந்துகொண்டு இருக்கின்றன. 8ஆம் நூற்றாண்டில் வாதவூராரின் கூற்றும் இங்கு நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. எந்த விதமான மேம்பட்ட அறிவியல் தொழில்நுட்பக் கருவிகளும் இல்லாத காலத்தில் வெறும் மனக் கண்களால் இயற்கையை உற்றுநோக்கி ஆழ்ந்த அறிவைப் பெற்றனர் என்பது மலைப்பைத் தான் தருகிறது.

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை உளப்பெருங் காட்சி
ஒன்றது கொன்று நின்றில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"
(திருவாசகம். திருவண்டப்பகுதி 658)

காப்பியங்களிலும் வான் பொருள்களும் அவற்றின் எழிலும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. பாண்டிமாதேவியின் கட்டிலின் மேற்கூரையில் ஓரை மண்டலம் (இராசி மண்டலம்) வரையப்பட்டு, நிலவு, உரோகினி கூடியிருந்ததாக,

"முரண்மிகு சிறப்பின் செல்வனொரு
நிலைஇய
உரோகினி நினைவனள் நோக்கி நெடிது
உயிரா"
என்று நெடுநல்வாடை கூறுகிறது.

வானக் கலையில் புலமைபெற்று விளங்கி அதன் போக்கைக் கணிப்பவர்கள் கணியன்கள் என அழைக்கப்பட்டனர். உயர் அலுவலர் "பெருங்கணி" எனப்பட்டதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. ஊர்களும் கணியனூர், கணியம்பாடி, கணியூர், கணியாகுறிச்சி என இருந்துள்ளன. சங்கப் புலவர்கள் அறிவியலாளர் அல்லர். ஆனால் இயற்கையை, சூழலை, மண்ணை, மலையை, கடலை எனத் தம் வாழிடத்தை உற்றுநோக்கி உண்மைகளைக் கண்டனர். இவர்கள் வானத்தையே வீட்டின் கூரையாகக் கொண்டு வாழ்ந்தனர். பாரியின் பறம்பு மலையை மூவேந்தரும் வலிமையுடன் சென்றும் வீழ்த்த முடியாமைக்குக் காரணம் அவர்களின் வானியல் மற்றும் சூழலியல் அறிவே. பறம்பு மலையில் வாழும் மக்களின் அன்றாடப் பணியாகச் சுட்டப்படுவது விண்ணையும் மண்ணையும் உற்றுநோக்கிப் பயிலுதல் ஆகும்.

வாழ்க்கைக்கு வாழிடம், தட்ப வெப்பச்சூழல் அடிப்படை. அதனால் தான் முதல், கரு, உரி எனும் மூன்றனுள் முதலாவதாக நிலத்தையும் பொழுதையும் வைத்தனர். நிலம் சூரியனிடமிருந்து சிற்றி விழுந்த துண்டு என்பர். இந்த நிலவுலகம் வானியலின் தொடக்கம். வானியல் குறித்த சிந்தனைகள் வரலாற்றுக் காலந்தொட்டே வளர்ந்து வந்துள்ளதை நாம் நம் இலக்கியங்களின் வழியாக அறியலாம். வாழ்க்கையோடு இயைந்த இயற்கையை, வானியல் சிந்தனைகளை நம் இலக்கியங்களில் காணலாம். தமிழர்தம் நாகரிகமும் மொழியும் என்று தோன்றியதோ அன்றே அவர்களது வானியல் சிந்தனையும் தோன்றியது. இந்த அறிவுப் பெட்டகங்களை முழுமையாக வாசித்துப் போற்ற வேண்டியது நம் கடமையாகும். நிற்க.,

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "செந்தமிழ் வளர்த்த ஈழத்து மூதறிஞர் வரலாறு – ஓர் பன்முக நோக்கு " என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின் "ஒட்டுவாரொட்டி" என்னும் கட்டுரையும், முனைவர் ப. கொழுந்தசாமி அவர்களின், "ஒரு குறளில் ஐந்து வேற்றுமை" எனும் கட்டுரையும், எழுத்தாளர் அண்டனூர் சுரா அவர்களின், " முதுகுளம் – அதைச் சுற்றியுள்ள ஊர் காரணப் பெயர்கள்" எனும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கத்தின் 100 ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் வி. திருவள்ளுவன் அவர்களுக்கும், தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர் முதுமுனைவர் பேரா. சோ. ஆறுமுகம் அவர்களுக்கும், அகராதியியல் அறிஞர் பேரா. முனைவர் ச. சச்சிதானந்தம் அவர்களுக்கும் என் அன்பு நன்றிகள்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

## நினைவுகூர்தலா? நினைவுகூறுதலா?

'கூர்தல்' என்ற உரிச்சொல்லுக்கு " உள்ளது சிறத்தல்" என்பது தொல்காப்பியம் குறிப்பிடும் பொருள். மறந்து போனதைச் சிறிது சிறிதாக நினைவுக்குக் கொண்டு வருவதைக் 'கூர்தல்' என்ற சொல்லால் குறிப்பிட்டார்கள். "படர் கூர் மாலை", "துயர்கூர் வாடை" என்று சங்கப் பாடல்களில் வரும்போதும் இதுபோலவே கொஞ்சம் கொஞ்சமாகக் கூடுவதைக் குறிக்கிறது. இன்று 'நினைவு கூற வேண்டும்' என்று எழுதுவது, பழைய 'கூர்தல்' என்ற சொல்லை நினைவுகூராததால் வந்த வினை. இனியேனும் முன்னைய இலக்கிய வழக்குகளும் – அக்காலப் பேச்சு வழக்குகளும் – இன்றும் நம் நடைமுறையில் இருப்பதால், அத்தகைய முக்கியமானவற்றை மறவாமல் நினைவு கூர்வோமாக!

நினைவு கூர்தல் – பழையதை நினைவுக்குக் கொண்டு வருதல். தமிழ் மொழிக்காக ஈகம் செய்தவர்களை நினைவுகூர்வது நம் கடமை.

நன்றி : உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்

# செந்தமிழ் வளர்த்த ஈழத்து மூதறிஞர் வரலாறு

## – ஓர் பன்முக ஆய்வு



முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு



வரலாறு என்பது, நடந்து முடிந்த நிகழ்வுகளையும் அவை தரும் செய்திகளையும் முறைப்படுத்தி, வருங்காலத்திற்குச் சான்றாகவும் அறிவுறுத்தலாகவும் அமைவது. ஆய்வு (Research ஆங்கிலம் – Recherche – பிரெஞ்சு) என்றால் தேடுதல் என்று அர்த்தம். அறிவின் அடிப்படையில், ஆதாரங்களைக் கொண்டு உண்மையைக்காண மேற்கொள்ளும் முயற்சியே ஆய்வு. Research என்ற ஆங்கிலச்சொல் Recherche என்ற பிரெஞ்சுச் சொல்லின் வழி வந்தது. Recherche என்பதற்கு 'அறிந்துகொள்வதற்கு கவனத்துடன் தேடுதல்' என்று பொருள்.

ஈழநாட்டுக்கு மட்டுமன்றி தமிழ்வழங்கும் நாடுகள் முழுமைக்கும் பெரும்பயனளித்து அரும் புகழ்படைத்த இலக்கண – இலக்கியங்களை நன்கு பயின்ற ஈழத்து மூத்த தமிழறிஞர்கள், புலவர்கள் செம்மொழியான நம்செந்தமிழ் வளர்ச்சிக்கு பெரும்பணியாற்றி மறைந்தார்கள். அப்பணிகளைத் தெரியாதவர்களுக்குத் தெரியச்செய்வதையும், மறந்தவர்களுக்கு நினைவூட்டுவதையும், மறைத்தவர்களுக்கு வெளிப்படுத்துவதையும், இருட்டடிப்புச் செய்யப்பட்டதை வெளிச்சத்துக்குக் கொண்டு வருவதையும் பெருமையுடன் கடமையாகக் கருதி, இவ்வாய்வுக் கட்டுரையைச் சுருக்கமாக வரைகிறேன். ஈழத்தறிஞர் தொடர்பாக நான் பெற்ற அறிவு சிற்றறிவு என்பதனால், இஃது ஓர் பூரணமான ஆய்வு என திருப்தி அடையமாட்டேன்.

தமிழ் இந்தியாவில் பிறந்த மொழி. ஆயினும் தமிழர் எனும் போது, அஃது ஈழத்தமிழரையும் குறித்து நிற்கும். 65,610 சதுர கிலோ மீட்டர் நிலப்பரப்புடைய இலங்கையைத் தமிழ்ப் பாரம்பரியத்தில் ஈழம் என வழங்கும் மரபு உண்டு. ஈழத்தில் தமிழ் பேசும் மக்களை,

இலங்கைத்தமிழர், இந்தியத்தமிழர், இஸ்லாமியத் தமிழர் எனப் பிரித்து நோக்கும் ஒரு முறைமை உண்டு. மூவகைத் தமிழர்களும் தமிழுக்கு நிறையவே பணி புரிந்திருக்கிறார்கள். தமிழைத் தம்தம் வழியில் வளர்க்கிறார்கள். இனிமையான தமிழ், தூயதமிழ் என அறிஞர் திரு.வி.க. போன்றோரால் புகழ்ந்துரைக்கப்படுவது ஈழத்தமிழ். தமிழுலகில் புலம்பெயர் தமிழிலக்கியம் எனப்படும் சொல்லாடல் ஈழத்தை விட்டு புலம்பெயர்ந்து ஐரோப்பா, கனடா, ஆஸ்திரேலியா முதலான நாடுகளில் வாழும் ஈழத்தமிழர்களின் படைப்புக்களையே அடையாளப்படுத்தி நிற்கிறது.

தமிழகத்துக்கு அடுத்ததாகத் தமிழர் பெருந்தொகையில் பன்னெடுங்காலமாக பண்பாட்டு வளத்துடன் வாழ்ந்து வரும் நாடுகளில் முதன்மையானது இலங்கை எனும் ஈழம். ஈழத்தமிழர் தமிழகத்தோடு தொன்றுதொட்டுத் தொப்புள்கொடி உறவாக பண்பாட்டுறவைப் பேணிவந்தாலும் தமக்கெனத் தனியான பண்பாட்டு மரபுகளையும் உருவாக்கி வளர்த்து வந்திருக்கின்றார்கள்; வருகின்றார்கள். ஈழத்தமிழர்களின் மொழியமைதி முதல் சமூக அமைப்பு வரை, உடை முதல் உணவு வழக்கங்கள் வரை, பொருளியல் அமைப்பு முறை முதல் உலக நோக்க வேறுபாடு வரை தனித்தன்மைகளைக் கண்டுணர முடியும் எனப் பகன்றார் பேராசிரியர் கா.சிவத்தம்பி.

பழங்காலம் முதற்கொண்டே ஈழம் தமிழ் வளர்த்த நிலமாக இருந்து வந்திருக்கிறது. அந்த நிலத்தில் தோன்றிய புலவர்கள், பண்டிதர்கள், பேராசிரியர்கள், அறிஞர்கள் மற்றும் ஆன்றோர்கள் செந்தமிழ் வளர்ப்பதற்கு அருந்தொண்டு ஆற்றியிருக்கின்றார்கள். தமிழ் வளர்த்த ஈழச்சான்றோர்கள் என எண்ணும்கால், ஈழத்துப் பூதந்தேவனார், ஆறுமுகநாவலர், சுவாமி ஞானப்பிரகாசர், டானியல் கறோல்வை, விசுவநாதபிள்ளை, ஹெலக்விசுவநாதபிள்ளை, யாழ்ப்பாணம் பதுறுத்தீன் புலவர், உடுப்பிட்டி சிவசம்புப்புலவர், அப்துல் காதிர் புலவர், காலி செய்குத் தம்பிப் புலவர் சி.வை. தாமோதரம்பிள்ளை, சுவாமிவிபுலானந்தர், நா. கதிரவேற்பிள்ளை, சோமசுந்தரப்புலவர் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, ஆறுமுகம் தம்பிரான். முருகேசபண்டிதர். வித்துவசிரோன்மணி ச. பொன்னம்பலபிள்ளை, சித்திலெப்பை, சபாபதி நாவலர், அம்பலவாண நாவலர், ந.சி.கந்தையா, புலவர்மணி பெரிய தம்பிப்பிள்ளை, பூபாலப்பிள்ளை, அருள்வாக்கி அப்துல்காதிர் புலவர், குமாரசாமிப்புலவர், ம.க.வேற்பிள்ளை, கணேசையா, தனிநாயகம் அடிகள், முகமது உவைஸ், கலாநிதி. ஆ.சதாசிவம், துணைவேந்தர் சு.வித்தியானந்தன், பேராசிரியர் க.கணபதிப்பிள்ளை, பேராசிரியர். வி. செல்வநாயகம், பேராசிரியர் க.கைலாசபதி, தமிழ்ச்செல்வர் கா.பொ.இரத்தினம், பேராசிரியர் கா.சிவத்தம்பி என நூற்றுக்கணக்காகப் பட்டியல் நீண்டு கொண்டே போகும்! அப்பெருமக்களில் கட்டாயமாக மனங்கொள்ளவேண்டிய கனம் தங்கிய மூதறிஞர்களைப் பற்றி பார்ப்போம்.

## தமிழ்ச்சங்கத்து ஈழத்துத் தலைமகன் பூதந்தேவனார்

(யாழ்ப்பாணம் கி.பி. 130 மதுரை)

தமிழ்ச்சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த புலவர்களில் ஈழத்துப்பூதந்தேவனாரும் ஒருவர். சங்கம் வளர்த்த பெரும் புலவர்களில் ஈழத்து முதற் புலவராக வீற்றிருப்பவர் பூதந்தேவனார். இப்புலவர்பெருமான் ஈழத்தில் – யாழ்ப்பாணத்தில் பிறந்து, மதுரையில் வாழ்ந்ததனால் ஈழத்துப் பூதந்தேவனார் எனவும் மதுரை ஈழத்துப் பூதந்தேவனார் எனவும் தமிழ் வரலாற்றில் அழைக்கப்படுகிறார். கடைச்சங்கத்துப் புலவரான இவர் கி.பி.130 ஆண்டளவில் வாழ்ந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

சங்க இலக்கியங்களில் பூதந்தேவனார் இயற்றிய சொற்செட்டும் பொருட்தெளிவும் கொண்ட செய்யுள்கள் ஏழு உள்ளன.

அகநானூறு : 88,231, 307. குறுந்தொகை : 189, 343, 360, நற்றிணை : 366

## தமிழ் வளர்த்த ஈழத்துப் பெருமகன் ஆறுமுகநாவலர்

(1822 நல்லூர் – 1879 யாழ்ப்பாணம்)

தமிழ்மொழிக்கு மட்டுமன்றி சைவசமயத்துக்கும் புத்துயிர் ஊட்ட பிறந்த வசனநடை வல்லாளர் ஆறுமுகநாவலர் அவர்கள். மிகப்பெருந் தலையையும் மற்றைய உறுப்புகளை ஒல்லியாகவும் பெற்றிருந்த ஆறுமுகநாவலர் ஆரம்பத்தில் தந்தையாரான ஆராய்ச்சி கந்தப்பிள்ளையிடமும், பின்னர்

சுப்பிரமணியபிள்ளை, சரவணமுத்து, வேலாயுத முதலியார், சேனாதிராய முதலியார் ஆகிய தமிழ்ப்புலவர்களிடம் தமிழையும், பெர்சிவல் பாதிரியாரிடம் ஆங்கிலத்தையும் பயின்றார். அக்காலத்தில் தமிழ் – ஆங்கில மொழிகளை மொழிபெயர்ப்பதிலும், தூயதமிழைப் பேசுவதிலும் எழுதுவதிலும் இவருக்கு இணையாக எவரும் இல்லை என்ற புகழ் யாழ்ப்பாணம் எங்கும் பரவியது. அப்போது வெஸ்லியன் மிஷன் கல்லூரி (யாழ் மத்திய கல்லூரி)யின் ஆங்கில ஆசிரியராகவும், அதிபரான பெர்சிவல் பாதிரியாரின் தமிழாசிரியராகவும் பணிபுரிந்தார். பிரித்தானிய வேதாகம சங்கம் பைபிளைத் தமிழில் மொழிபெயர்ப்பதற்குச் சென்னை வேதாகம சங்கத்திடமும் யாழ்ப்பாண வேதாகம சங்கத்திடமும் ஒப்படைத்திருந்தது. இரண்டு வேதாகம சங்கத்தாரும் 1841 இலிருந்து 1846வரை மொழிபெயர்த்திருந்தனர். மொழிபெயர்ப்புக் கலையில் ஈழத்தவர் தலைச்சிறந்தவர் என்பதனையும் யாழ்ப்பாணத் தமிழ் செந்தமிழ் என்பதனையும் விவிலிய – பைபிள் மொழிபெயர்ப்புமூலம் நிலைநாட்டினார். வீரமாமுனிவருக்குப் பின் தமிழ் உரைநடையைப் புதிய பாதையில் இட்டுச்சென்ற வசனநடை கைவந்த வல்லாளரான நாவலர் ஆங்கிலத்தில் பயன்படுத்தப்படுவது போன்று நிறுத்தற் குறியீடுகளைத் தமிழ் உரை நடையில் பயன்படுத்தினார்.

ஈழத்தமிழறிஞர்களில் முதன்மையானவராகத் திகழ்ந்த நாவலரின் தமிழ் இலக்கிய உறவு இன்று ஈழத்தறிஞரின் தமிழ்ப்புலமை வழிகாட்டுவதாக உள்ளது. அவர் கற்பித்தல் முறையில் புதுமையை ஏற்படுத்தினார். சைவப்பிரகாச வித்தியாசாலைகளை அமைத்தார். வித்தியாநுபாலன அச்சியந்திரசாலைகளைச் சென்னையிலும் யாழ்ப்பாணத்திலும் நிறுவினார். பாடநூல்களை எழுதினார், பழைய நூல்களுக்கு உரை எழுதினார், புழைய நூல்களைப் பதிப்பித்தார். தமிழில் சைவசமய பிரசங்க முறையைத் தொடக்கி வைத்தார். வேதாகமத்தைத் தமிழில் முதல் தந்த சிவத்தமிழர். தமிழ்க்கல்வி வளர்ச்சிக்கு எல்லோர் கையிலும் நூல்கள் இருக்க வேண்டும் என்பதற்காக 51 நூல்கள் இயற்றினார். ஈழத்தில் 12 நூல்களும் தமிழ்நாட்டில் 23 நூல்களும் வெளியிட்டார் நாவலர் பெருமான்.

### நாவலர் இயற்றிய நூல்களில் பத்து + பத்து :

| ஈழத்தில் வெளியிட்டவை | தமிழகத்தில் வெளியிட்டவை |
|---|---|
| 01. பால பாடங்கள் 1, 2 | 11. சூடாமணி நிகண்டு |
| 02. ஆத்தி சூடி, கொன்றை வேந்தன். உரை | 12. திருக்குறள் பரிமேலழகர் உரை |
| 03. ஞானகும்மி | 13. பாலபாடம் - 3 |
| 04. வச்சிரதண்டம் | 14. கந்தபுராணம் |
| 05. சைவ தூஷண பரிகாரம் | 15. இலக்கண விளக்கச் சூறாவளி |
| 06. சுப்பிர பேதம் | 16. தொல்காப்பியச் சூத்திர விருத்தி |
| 07. பெரிய புராண வசனம் | 17. இலக்கணக் கொத்து |
| 08. யாழ்ப்பாணத்து சமய நிலை | 18. தொல்காப்பியம் சேனாவரையருரை |
| 09. நன்னூல் விருத்தியுரை | 19. இலக்கண வினா விடை |
| 10. திருமுருகாற்றுப்படை | 20. இலக்கணச் சுருக்கம் |

வசன நடை வல்லாளர், உரைநடையின் தந்தை என்று போற்றப்படும் அளவுக்கு இவரது இலக்கிய, இலக்கணப் பயிற்சி வன்மையை விளக்கும் நூல்களை சைவத்திலும் தமிழிலும் காணமுடியும். தமிழ் வளர்த்த பெருமகன் என நாவலரைப் புகழ்ந்து ஈழத்தில் 1969 ஆம் ஆண்டு சிலை எழுப்பி விழா எடுக்கப்பட்டது.

### ஈழத்தில் முதல் நவீனம் தந்த பேரறிஞர் சித்திலெப்பை

(1833 கண்டி – 1898 கொழும்பு)

முதலாவது முஸ்லீம் சட்டத்தரணியாகவும், கொழும்பு நீதிபதியாகவும் கடமையாற்றிய கண்டி முகமது காசிம் சித்திலெப்பை அவர்கள் 1891 இல் கொழும்பில் முஸ்லீம் கல்விச் சங்கத்தை நிறுவினார். பின்னர் 1882 இல் முஸ்லீம் நேசன் என்ற பத்திரிகையைத் தொடங்கினார். இஸ்லாமியர்களுக்குப் பாடநூல்களை எழுதினார். கொழும்பில் மத்ரசதுல் கைரியாவையும் சாகிராவையும் அமைத்தார். இக்கல்விமானின் இலக்கியப் பணிகளுக்கெல்லாம் மணிமகுடம் வைத்தாற்போல் செய்த ஆக்கம்தான் அஸன்பேயின் கதை எனும் நவீனத்தை எழுதியது ஆகும்.

இந்த ஆரிபு பில்லா எழுதிய நூல்கள் :

| | |
|---|---|
| 1. சுறாத்துஸ்ஸலாத்து | 5. யுத்த சரித்திரம் |
| 2. அஸ்றாறுல் ஆலம் | 6. இலங்கை சோனகர் சரித்திரம் |
| 3. துருக்கிகிரேக்க சரித்திரம் | 7. அபுநவாஸ் கதைகள் |
| 4. உமறுபாஷா | 8. அஸன்பேயின் கதை |

இராவ்பகதூர்
சி.வை. தாமோதரம்பிள்ளை
(1833 சிறுப்பிட்டி – 1901 கொழும்பு)

தமிழ்த்தொண்டுக்குத் தம்மை ஈடுபடுத்திய சான்றோர்கள் பலரில் 'தமிழ் வளர்த்த' 'தமிழ் காத்த', 'தமிழ்தந்த' என்னும் அடைமொழிகளுடன் அழைக்கப்படும் தனிச்சிறப்புக்கும், சென்னை அரசாங்கத்தினால் இராவ்பகதூர் பட்டமளிக்கப்பட்டுச் சிறப்பிக்கப்பட்ட ஈழத்தவர் எனும் தனிச்சிறப்புக்கும் உரியவரே இராவ்பகதூர் சி.வை.தாமோதரம்பிள்ளை அவர்கள்.

இந்தியாவிலே பல்கலைக்கழகங்கள் முதன்முதலாக 1857 இல் கல்கத்தாவிலும் சென்னையிலும் நிறுவப்பட்டன. சென்னைப் பல்கலைக்கழகம் பட்டப்படிப்புக்காகப் புகுமுகத் தேர்வுகளை நடத்திய போது, அத்தேர்வுக்குச் சி.வை.தாமோதரம்பிள்ளையும் டானியல் கறோல் விசுவநாத பிள்ளையுமே தோற்றி சித்தியடைந்தார்கள். இப்பல்கலைக்கழகத்திலே இளங்கலை – இளமாணி பட்டத்தை முதன்முதலில் பெற்றவர்கள் இந்த இரு இலங்கையர்கள் மட்டுமே!

இராவ்பகதூர் அவர்கள் கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக்கலாசாலையில் ஆசிரியராகவும், உதயதாரகை, தினவர்த்தமானி பத்திரிகைகளின் ஆசிரியராகவும், இந்தியாவில் நீதிபதியாகவும், முன்னோடிப் பதிப்பாளராகவும் நூலாசிரியராகவும் பணி ஆற்றினார். பனையோலை ஏடுகளைப் புறக்கணித்தால் பழைய நூல்கள் அழிந்துவிடுமே என்று பெருங் கவலை கொண்டு முதற்குரல் எழுப்பி பல தமிழ் நூல்களைக் காப்பாற்றிய இராவ்பகதூர் தமிழ்மொழியைத் தாய் என்று வணங்கிப்போற்றும் அளவிற்கு முதன்முதலில் உணர்ச்சியை ஊட்டியவர்.

'சங்கம் மருவிய நூல்களுள் சில இப்போதுதானும் கிடைப்பது சமுசயம். எத்தனையோ திவ்ய மதுரகிரந்தங்கள் காலாந்திரத்தில் ஒன்றன் பின் ஒன்றாய் அழிகின்றன. சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா? ஆச்சரியம்! ஆச்சரியம்! அயலான் அழியக் காண்கிலும் மனம் தளம்புகின்றதே! தமிழ்மாது நும் தாய் அல்லவா? இவள் அழிய நமக்கு ஏன் என்று வாளா இருக்கின்றீர்களா? என்று எழுதிய சொற்களில் தமிழ் மொழியிடத்திலும் இலக்கியங்களிடத்திலும் அவர் கொண்டிருந்த பக்தியுணர்ச்சி புலனாகின்றது.

முதல் கலைக்களஞ்சியம் அளித்த
ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை
(1858 மானிப்பாய் – 1917 யாழ்ப்பாணம்)

"ஈழத்தமிழகத்தில் தோன்றிய தமிழகப் புகழாளர்களை நாம் நினைவு கூர மறந்துவிட்ட காரணத்தால் அவர்களுடைய பணிகளையும் அவர்களையுமே உலகு மறக்க நேர்ந்துள்ளது. இதற்குப் பிள்ளையவர்களும் விதிவிலக்கல்ல. தமிழில் கலைக்களஞ்சியம் ஒன்றைத் தந்த முதல்வர் என்ற பெருமைக்குரியவர். எனினும் இந்த உண்மையைப் பலர் மறந்துவிட்டனர். சென்னைத் தமிழ் வளர்ச்சிக்கழகம் வெளியிட்ட கலைக்களஞ்சியம் முதலாம் தொகுதியில் சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத்தமிழாசிரியர்திரு.ஆ.சிங்காரவேலு முதலியார் எழுதி வெளியிட்ட அபிதான சிந்தாமணியே முதல் முதலில் வெளிவந்த கலைக்களஞ்சியம் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இஃது உண்மைக்குப் புறம்பானது. ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை 1886 இல் அபிதானகோசம் என்ற கலைக்களஞ்சியத்தை எழுதத்தொடங்கி 1902 இல் அதனை அச்சிட்டு வெளியிட்டார் என்பது முகவுரை மூலம் பெறப்படுகிறது"

ஈழத்தறிஞர் பற்றிய செய்திகள் தென்னகத்தே லகவனிக்கப்படவில்லையென்றும் கூறப்படுகிறது. குறிப்பாக ஈழத்தறிஞரான ஆ.முத்துத்தம்பிப்பிள்ளையின் கலைக்களஞ்சியப் பணி சரியான முறையில் ஆவணப்படுத்தப்படவில்லை என்ற குறை இன்று வரை நிலவுகிறது. பிள்ளையவர்களின் வரலாறு கூறும் நூலின் பதிப்புரையில் மேற்காணும் செய்தி பொறிக்கப்பட்டிருந்தது. "செந்தமிழ்வாகனச்சிங்கம் என அழைக்கப்பட்ட ஆறுமுகம்பிள்ளை முத்துத்தம்பிப்பிள்ளை முதல் கலைக்களஞ்சியத்தை மட்டும்

எழுதவில்லை முதல் English – English – Tamil அகராதியையும் 1908இல் எழுதி வெளியிட்ட பெருமைக்கும் உரியவர். இவருக்கு முன்பு English – Tamil அகராதி எழுதப்பட்டிருக்கிறது. இந்த அகராதியியலாளர் பிரபோத சந்திரோத வசனம், விவேகானந்த சுவாமிகள் பிரசங்க மொழிபெயர்ப்பு, பாரதச் சுருக்கம், யாழ்ப்பாணச் சரித்திரம், இலங்கைச் சரித்திர சூசனம், ஈழமண்டலப் புலவர் சரித்திரம், தென் மொழி வரலாறு, நன்னூல் உதாரண விளக்கம், நன்னூல் இலகுபேதம் முதலான அரிய நூல்களைப் படைத்துப்போந்தார்.

– Lexicographer

Pillai was the first writer to publish an encyclopaedic work in Tamil – the Abhidana Kosam. He tells us in his Preface that it was started in 1886 while he was in Madras.

The Kalai Kalanjiyam of Madras volume I under Abidhana Sinthamani 1910, states that it was the first encyclopaedic work. This is not correct. Abidhana Kosam of Pillai was published in 1902, eight years earlier. – Two Eminent Tamil Scholars of Jaffina and ...–– Mrs.Thangaratnam Muttucumaraswamy.B.A. (U.K.)

### தமிழ்ச் சொற்பிறப்பு ஆராய்ச்சியின் தந்தை ஞானப்பிரகாசர்

(1875 மானிப்பாய் – 1947 சிதம்பரம்)

தாய்த்தமிழகம் சென்று, கலாஞான பண்டிதராகத் தேர்ச்சி பெற்று, தமிழ்ப்பணியும், சமயப் பணியும் செய்து பொன்றாப்புகழைத் தமதாக்கிக்கொண்ட முதல் ஈழத்தமிழர் ஞானப்பிரகாச சுவாமிகளாவார். ஜேர்மனியும் இலங்கையும் பன்மொழி அறிஞருக்கு முத்திரை வெளியிட்டு கௌரவித்தன.

ஞானப்பிரகாசர் 'தமிழ் அமைப்புற்ற வரலாறு' என்னும் நூலில் பல நூற்றுக்கணக்கான சொற்கள் ஒத்த இனம் கொண்ட கூட்டம் கூட்டமாய் வருவதையும் அவற்றில் குடும்பச்சாயல் போன்ற ஒற்றுமை இருப்பதையும் வெளிப்படுத்தினார். 70 மொழிகளில் புலமை பெற்றிருந்த சுவாமிகள் சமஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பல நூல்கள் இயற்றினார். சுமேரியமொழிக்கும் தமிழ்மொழிக்கும் உள்ள தொடர்புகள் பற்றி ஆராய்ந்து பத்திரிகைகளில் எழுதினார். சுவாமிகளுடையதமிழ்த்தொண்டில் மொழியாராய்ச்சியே சிறப்பிடத்தைப் பெறுகின்றது.

### ஞானப்பிரகாசர் இயற்றிய நூல்களில் பத்து:

| | |
|---|---|
| 01. தருக்க சாத்திரம் | 06. யாழ்ப்பாண சரித்திர ஆராய்ச்சி |
| 02. தமிழ்ச் சொற்பிறப்பாராய்ச்சி | 07. யாழ்ப்பாணத் தொல்குடிகள் |
| 03. தமிழ் ஒப்பியல் அகராதி | 08. பௌஷ்கராகம விருத்தி |
| 04. தமிழரின் பூர்வ சரித்திரமும் சமயமும் | 09. பிரமாண தீபிகை |
| 05. தமிழரின் ஆதி இருப்பிடமும் பழஞ் சரித்திரமும் | 10. தமிழ்மக்களிடையே சாதிப்பாகுபாட்டின் தோற்றம் |

### தங்கத்தாத்தா சோமசுந்தரப்புலவர்

(1876 நவாலி – 1953)

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ச் செய்யுள் இலக்கிய வளர்ச்சிக்கு ஈழத்துப்புலவராக பாரிய பங்களிப்பைச் சோமசுந்தரப் புலவர் ஆற்றினார். இவர் தமிழகத்துக் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, இராமலிங்கம்பிள்ளை மற்றும் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் போன்ற பாவலர்களுடன் ஒப்பிடத்தக்க பாவலர். தலைசிறந்த புலவரான தங்கத்தாத்தா சிறுவர் செந்தமிழ், நாமகள் புகழ் மாலை, இலங்கை வளம், தாலவிலாசம், தந்தையார் பதிற்றுப்பத்து, உயிரிளங் குமரன் என்னும் நூல்களை யாத்தார். இப்புலவர் கட்டளைக் கலித்துறை, விருத்தம், வெண்பா, கலிவெண்பா, கொச்சகம் பாவகைகளைப் பயன்படுத்தி செய்யுள்களைப் படைத்தார். இவர் இயற்றிய ஆடிப்பிறப்பு, கொழுக்கட்டைப் பொன்னன், பவளக்கொடி, கத்தரிவெருளி, வெண்ணிலா, எலியும் சேவலும், தாடி அறுந்த வேடன், இலவு காத்த கிளி போன்ற அருமையான சிறுவர் பாடல்கள் இன்றும் சிறுவர் பாடி மகிழும் பாடல்கள் ஆகும். இவர் உலகப் பிரசித்தி பெற்ற ஈசோப்பின் பாற்காரியும் பால்வாளி, பிரெஞ்சியப் புலவரான ஃபொந்தெனின் பாற்காரியும் பாற்குடமும் என்ற நீதிக்கதைகளைத் தழுவி, பவளக்கொடி பேராம், பருத் தித்துறை ஊராம்; எனத் துவங்கும் பவளக்கொடியைக் கதைப்பாடலாக அமைத்தார். நவாலியூர் வன்னிய சேகரன் பள்ளு, ஐம்புல வேடக்கும்மி, மருதடி விநாயகர் பள்ளு, கல்லுண்டாய் வைரவர் பதிகம் போன்றன இவர் எழுதிய பாடல்களில் குறிப்பிடத்தக்கன.

தமிழைப் போற்றுமாறு இயற்றிய பாடல் மூலம் புலவரின் தமிழ்ப் பற்றினை உணர்ந்து கொள்ளமுடியும்.

'வம்மின் புலவீர் ! வம்மின் புலவீர்!

இம்மையும் மறுமையும் நன்மை பயந்து

தொன்மையும் புதுமையு மென்மையுந் தெய்வத்

துண்மையு நிரம்பி யெழுமையுந் தொடர்ந்து

யாழினுங் குழலினும் பாலினுந் தேனினுங்

காணினுங் கேட்பினுங் கருதினு மினிக்கும்

அமிழ்துறழ் தலைமைத் தமிழ்மொழி யுணர்ந்த

மெய்நெறிப் புலவீர் வம்மினெல்லீரும்,

அந்தமு நடுவு மாதியுந் தெரியாச்

செந்தமிழ்ச் செல்வியைப் போற்றுதும் யாமெல்லாம்.'

### உலகின் முதற் தமிழ்ப்பேராசிரியர் விபுலானந்த அடிகள்

(1892 காரைதீவு – 1947 மட்டக்களப்பு)

விபுலானந்த அடிகளின் இளமைப்பெயர் தம்பிப்பிள்ளை, பின்னர் மாற்றி இடப்பட்ட பெயர் மயில்வாகனன். சாதாரண தமிழ் ஆசிரியனாகத் தனது கல்விப்பணியைத் தொடங்கிய அடிகளார் பாடசாலை அதிபராகி பல்கலைக்கழக விரிவுரையாளராகி, மதுரைத் தமிழ்ச்சங்க பண்டிதராகி அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முதல் தமிழ்ப் பேராசிரியராகி, கலைப் பீடாதிபதியாகி இலங்கைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும் இலங்கியவர் விபுலானந்த அடிகள். முத்தமிழ் வித்தகர் தயாரித்து வழங்கிய பாடத்திட்டமே சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழாராய்ச்சித்துறைக்கு பாடத்திட்டம் ஆனது என்பது பெருமைக்கு உரித்தானது. பச்சையப்பன் கல்லூரியின் சொல்லாக்கக் கழகத்தின் பொதுத் தலைவராக வீற்றிருக்கத் தகைமை பெற்றிருந்தார்.

தூங்கிக்கிடக்கும் ஒரு சமூகத்தை விழித்தெழச் செய்யக்கூடிய அருமருந்து கல்விதான் என்பதை உணர்ந்து தன் வாழ்நாளின் பெரும் பகுதியைக் கல்வித்தொண்டு புரிவதற்கு அர்ப்பணித்தவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1929 இல் நிறுவப்பட்டதில் முத்தமிழ் வித்தகரின் பங்களிப்பும் உண்டு. பெண்களின் கல்விக்காகக் காரைதீவில் சாரதா பெண்கள் வித்தியாலயத்தையும் கல்லடியில் சிவானந்த வித்தியாலயத்தையும் நிறுவிய கல்விமான். ஆதரவற்ற சிறுவர்களுக்காக கல்லடியில் ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்தை அமைத்தவர்.

தமிழுடன் ஆங்கிலம், சமஸ்கிருதம், சிங்களம், இலத்தீன், மலையாளம் ஆகிய மொழி களில் பாண்டித்தியம் பெற்ற அடிகளார் படைத்த நூல்களில் பத்து:

### மகாவித்துவான் எவ். எக்ஸ். சி. நடராஜா

(1911 காரைநகர் – 1997 மட்டக்களப்பு)

சுவாமி விபுலானந்தரின் முயற்சியில் எழுந்த யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷா அபிவிருத்திச் சங்கம்; நடத்திய பிரவேச பண்டிதர், பாலபண்டிதர், பண்டிதர் ஆகிய பரீட்சைகளில் 1934இல் தேர்ச்சி அடைந்தார். 1936 இலிருந்து 1946 வரை மட்டக்களப்பு ஆசிரிய பயிற்சிக் கலாசாலையிலும், 1947 இலிருந்து 1950 வரையும் அட்டாளச்சேனை ஆசிரிய பயிற்சிக்கலாசாலையிலும் விரிவுரையாளராகக் கடமை ஆற்றினார். தமிழ்ப் புலமைத்துவ மரபொன்றைத் தமிழ் ஆசிரியர்கள் மத்தியில் விதைத்து விசாலிக்கும் பணிக்கு ஆசிரிய கலாசாலைகள் பண்டிருக்கு உதவியாக இருந்தன. சுவாமி விபுலானந்தரின் வழிகாட்டலிலும், பேராசிரியர்கள் க. கணபதிப்பிள்ளை, வி.செல்வநாயகம், சு. வித்தியானந்தன் ஆகியோரின் நெறிப்படுத்தலிலும் 1947ஆம் ஆண்டு வித்துவான் பட்டம் பெற்றார்.

1952ஆம் ஆண்டு தொடக்கம் 1971 ஆம் ஆண்டு வரைக்கும் அரசகரும மொழித் திணைக்களத்தில் ஆராய்ச்சி உத்தியோகத்தராகவும் மொழிபெயர்ப்பு அத்தியட்சகராகவும் பணிபுரிந்தார். அரசகரும மொழித் திணைக்களத்தில் தமிழில் கலைச்சொற்கள் உருவாக்கத்தில் அதிக அக்கறை காட்டி அளப்பரிய பங்காற்றினார். இக்காலத்தில் பல்வேறு ஆய்வுகளை மேற்கொண்டு இலக்கியம், இலக்கணம்,

வரலாறு, பண்பாடு நோக்கிய நூல்களை எழுதியும் புதுப்பித்தும் தொகுத்தும் மொழிபெயர்த்தும் பலவிதமாகத் தமிழுக்கு உழைத்திருக்கிறார். தனது வாழ்நாளில் சேகரித்து வைத்திருந்த இரண்டாயிரத்து ஐநூறுக்கு அதிகமான கிடைப்பதற்கரிய பெறுமதிமிக்க அரிய நூல்களையெல்லாம் கிழக்குப் பல்கலைக்கழகத்திற்கு நன்கொடையாக அளித்த நூல்வள்ளல் கலாநிதி, கலாசூரி வித்துவான் எவ். எக்ஸ்.சி. நடராஜா அவர்கள்.

**நடராஜா அவர்களின் தமிழ்ப்பணிக்கு தேடிவந்த பட்டங்கள்.**

மட்டக்களப்பு மான்மியம் நூலுக்கு இலங்கை சாகித்திய மண்டலப் பரிசு;

ஜனாதிபதி பிரேமதாசா அவர்களின் 'கலாசூரி' விருது

இந்து கலாச்சார அமைச்சு – 'இலக்கியச் செம்மல்'

இந்து கலாச்சார அமைச்சு – 'இலக்கியக் கலாநிதி'

மட்டக்களப்பு மாவட்டக் கலாச்சாரப் பேரவை – 'மகாவித்துவான்'

-------வித்துவ விரோன்மணி.

------- மூதறிஞர்

**நடராஜா அவர்கள் படைத்த நூல்களில் பத்து :**

| | |
|---|---|
| 01. கலைச்சொல் அகராதி | 06. கணேச தோத்திர பஞ்சகம் |
| 02. யாழ் நூல் | 07. தில்லைத் திருநடனம் |
| 03. மதங்க சூளாமணி | 08. நடராஜ வடிவம் |
| 04. விஞ்ஞான தீபம் | 09. கங்கையில் எழுதியிட்ட ஓலை |
| 05. குமாரமணி மாலை | 10. உமாமகேஸ்வரம் |

ஈழமும் தமிழும்

ஈழத்து நாடோடிப் பாடல்கள்

மொழிபெயர்ப்பு மரபு

ஈழத்துத் தமிழ்நூல் மரபு

மட்டக்களப்பு மான்மியம்

காரைநகர் மான்மியம்

இலங்கைச் சரித்திரம்

கண்ணகி வழக்குரை

மட்டக்களப்பு மக்கள் வாழ்வும் வளமும்

இலக்கிய விமரிசனம்

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் ஊற்றுக்கண் தனிநாயகம் அடிகள்**

(1913 கரம்பொன் – 1980 இலங்கை)

சேவியர் என்ற இளமைப்பெயருடைய தனிநாயகம் அடிகள் குருவானவராகச் சேர்ந்து கொழும்பிலும், ரோமிலும் சமயக்கல்வியைக் கற்ற பின்னர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கலைமாணி, முதுமாணிப் பட்டங்களைப் பெற்றார். தூத்துக்குடியில் ஆசிரியராக இருந்த போது தனிநாயகம் எனத் தன்பெயரைப் புனைந்து கொண்டார். இலங்கைப் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றிவிட்டு மலேசியப் பல்கலைக்கழகத்தில் இந்தியக் கலைகளின் பேராசிரியராக இருந்தார். 1957 இல் கல்வியியலில் கலாநிதிப் பட்டம் பெற்றார். தமிழ்த்தூது, ஒன்றே உலகம் என்ற தமிழ் நூல்களையும் சில ஆங்கில நூல்களையும் எழுதினார். நூற்றுக்கணக்கான கட்டுரைகளையும் வரைந்தார்.

ரோமில் படித்தபோது பிரெஞ்சு, இஸ்பானியம், ஜெர்மன், கிரேக்கம், சமஸ்கிருதம், போர்த்துக்கேயம், மலாய், ரஷ்யம் முதலான மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார். நாற்பதுக்கு மேற்பட்ட பல்கலைக்கழகங்களில் தமிழர் பண்பாட்டின் சிறப்புகள் பற்றி சொற்பொழிவாற்றினார். தமிழ் பற்றிய ஆய்வினைப் பல்கலைக்கழகங்களில் முதன்முதல் எடுத்தாண்டவர் தனிநாயகம் அடிகளே. 1950 ஆம் ஆண்டு வெளிநாடுகளுக்குக் கல்விச்சுற்றுலா சென்றபோது அந்தநாட்டு மக்களின் வேண்டுகோளுக்கு இணங்க தமிழர் பண்பாடுகளைப் பிறருக்கு உணர்த்த தமிழ் – Tamil என்ற ஆங்கில சஞ்சிகையை வெளியிட்டு வந்தார்.

**அடிகளார் கற்றறிந்த மொழிகள் 13 :**

01. தமிழ் 02. சமஸ்கிருதம் 03. ஆங்கிலம் 04. இலத்தீன் 05. பிரெஞ்சு 06. ஜேர்மன் 07. கிரேக்கம் 08. சிங்களம் 09. போர்த்துக்கேயம்

10. இஸ்பானியம் 11. கீப்று 12. இத்தாலியம் 13. இரஷ்யம்

உலகத் தமிழறிஞர்களின் துணையுடன் நான்கு உலகத் தமிழாராய்ச்சி மாநாடுகளை நடாத்திய சாதனையாளர் தனிநாயகம் அடிகள் 1980 ஆம் ஆண்டு செப்டம்பர் முதலாம் நாள் இயற்கை எய்தினார்.

### தமிழ் இஸ்லாமிய முதல் துணைவேந்தர் முகம்மது உவைஸ்

(1922 பாணத்துறை–1996)

பேராசிரியர் கலாநிதி அல்லாமா ம. முகம்மது உவஸ்ஸை தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பாக நோக்கத்தக்கவர். 1946இல் இலங்கைப் பல்கலைக்கழகத்திலும் 1959இல் வித்தியோதய பல்கலைக்கழகத்திலும் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றிய உவைஸ் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இஸ்லாமியத் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும் அத்துறைக்குத் தலைவராகவும் 1979 இல் அமர்வு பெற்றார். இப்பேராசிரியர் 1953இல் தமிழ் இலக்கியத்திற்கு முஸ்லிம்களின் பங்களிப்பு எனும் ஆய்வேட்டினை நூலுருப் பெறச் செய்து இலங்கையிலும் தமிழகத்திலும் பரபரப்பு ஏற்படுத்தினார். உலகத் தமிழாராய்ச்சி மாநாடுகளில் பங்குபற்றி 'மதுரைக் கலம்பகமும் மக்காக் கலம்பகமும்' என்ற ஆய்வுக்கட்டுரையையும் சமர்ப்பித்தார். இஸ்லாமிய தமிழாராய்ச்சி மாநாடுகளிலும் பங்குபற்றி பல்வேறு ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் சமர்ப்பித்து தன்னறிவைப் பலரறியச் செய்தார். தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பாண்டித்தியம் உடையவராக இருந்ததனால் பல தமிழ் நூல்களைச் சிங்களத்தில் மொழிபெயர்த்தார். தமிழ்நாட்டில் விபுலானந்தருக்குப் பின்னர் ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு இரண்டாவது பேராசிரியரான பெருமைக்கு உரியவர் உவைஸ், இந்த அறிஞர் ஆசாரக்கோவை போன்ற நூல்களையும் பதிப்பு செய்திருக்கிறார்.

#### ஆராய்ந்து எழுதிய நூல்களில் பத்து:

01. தமிழ் இலக்கியத்தில் முஸ்லீம் காப்பியங்கள் – ஆங்கிலம்

02. இஸ்லாம் வளர்த்த தமிழ்

03. தமிழ் இலக்கியத்திற்கு முஸ்லீம்ளின் பங்களிப்பு

04. தமிழ் – அரபு அகராதி

05. இஸ்லாமிய தமிழ் இலக்கிய வரலாறு

06. தித்திக்கும் திருமறை – சிங்களம்

07. நபிகள் நாயகம் – சிங்களம்

08. கிராமப் பிறழ்வு – சிங்கள நாவல்

09. இஸ்லாமும் இன்பத்தமிழும்

10. முஸ்லீம்களுடைய பேச்சு வழக்குகள் – ஆங்கிலம்

### துணைவேந்தர் சு. வித்தியானந்தன்

(1924 யாழ்ப்பாணம்)

இலண்டனில் கலாநிதிப் (Ph.D.) பட்டம்பெற்று 1950இல் நாடு திரும்பியதும் இலங்கைப் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பதவியுயர்வு பெற்றார். 1970இல் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் நான்காவது தமிழ்ப்பேராசிரியர் ஆகி 1979 இல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டபோது அதன் முதல் துணைவேந்தர் ஆனார்.

பேராசிரியர். சு.வித்தியானந்தன் தமிழ் அன்னைக்கு அணிகலன்களாகப் பூட்டியவற்றினுள் பத்து :

01. இலக்கியத் தென்றல் 1953

02. தமிழர் சால்பு – 1954

03. மட்டக்களப்பு நாட்டுப் பாடல்கள் – 1960

04. கலையும் பண்பும் – 1961

05. தமிழியற் சிந்தனைகள் – 1979

06. அலங்காரரூபன் நாடகம் – 1962

07. மன்னார் நாட்டுப் பாடல்கள் – 1964

08. என்டிறீக்கு என்பதோர் நாடகம் – 1964

09. ஞானசவுந்தரி நாடகம் – 1967

10. கஞ்சன் அம்மானை – 1976

### பேராசிரியர் க. கைலாசபதி

(1933 கோலாலம்பூர் –1982 யாழ்ப்பாணம்)

ஒக்ஸ்ஃபோர்ட் பல்கலைக்கழகத்தில் 'Tamil Heroic Poetry – வீர ஊழிக்காலக் கவிதை' எனும் ஆய்வினை மேற்கொண்டு 1968இல் கலாநிதிப் பட்டம் பெற்றார். கலாநிதி ஆன கையோடு கைலாசபதி அவர்கள் பேராதனைப் பல்கலைக்கழகத்திலிருந்து 1969இல் கொழும்புப் பல்கலைக்கழகத்திற்கு இடமாற்றம் பெற்று அங்கு வித்தியாலங்கர வளாகத்தில் தமிழ் – இந்து நாகரிகத்துறை தலைவராகப் பொறுப்பேற்றார். 1974இல் இலங்கைப் பல்கலைக்கழக யாழ்ப்பாண வளாகம் ஆரம்பிக்கப்பட்ட போது அதன் தலைவராக நியமிக்கப்பட்டு, தமிழ்ப்பேராசிரியர் பதவியும் பெற்றார். பின்னர் யாழ் வளாகம் யாழ் பல்கலைக் கழகமாக உயர்ந்த போது, அங்கு கலைப்பீடத்தின் பீடாதிபதி (Dean) ஆனார்.

ஈழத்து தமிழ் இலக்கியம், நவீன தமிழ் இலக்கியம் ஆகியவற்றில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். இவர் ஈழத்தமிழரின் இலக்கியங்கள் ஆராயப்படவேண்டும், இலங்கையில் தமிழ் இலக்கியம் என்றொரு தனிப்பகுதி உருவாக வேண்டும் என்பதற்காக அயராது உழைத்தார். இவர் பணியாற்றிய பல்கலைக் கழகங்களில் பாடவிதானத்தில் ஈழத்துத் தமிழ் இலக்கியத்தையும் நவீன தமிழ் இலக்கியத்தையும் அறிமுகம் செய்தார்.

பேராசிரியர் கைலாசபதி அவர்கள் மேற்கொண்ட ஒப்பியல் ஆய்வு முயற்சிகள் ஈழத்து இலக்கிய வளர்ச்சியில் முக்கிய இடம்பெறுகின்றன. இவர் மகாகவி பாரதியாரையும் இரவீந்திரநாத் தாகூரையும் ஒப்பிட்டு இரு மகாகவிகள் என்ற நூலை எழுதினார். சங்க இலக்கியப் பாடல்களை கிரேக்க வீரவூழிக்காலப் பாடல்களுடன் ஒப்பிட்டு ஆய்வேடு சமர்ப்பித்து கலாநிதிப் பட்டம் பெற்றவர்.

இவர் படைத்தவற்றில் குறிப்பிடத்தக்க நூல்கள் பத்து:

01.இரு மகாகவிகள் –1962

02. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் –1966

03. தமிழ் நாவல் இலக்கியம்–1968

04. ஒப்பியல் இலக்கியம்–1969

05. இலக்கியமும் திறனாய்வும்–1972

06. திறனாய்வுப் பிரச்சினைகள்–1980

07. நவீன இலக்கியத்தின் அடிப்படைகள்–1980

08. இலக்கியச் சிந்தனைகள்–1983

09. கலை இலக்கியம் (ஆங்கிலம்)–1986

10. பாரதி (ஆங்கிலம்)–1987

### பேராசிரியர் கா. சிவத்தம்பி

சிவத்தம்பி என்ற நாமம் இல்லாமல் ஈழத்தமிழ் இலக்கியம் இல்லை என்கிற அளவுக்கு நீக்கமறத் திகழ்பவர் பேராசிரியர். கார்த்திகேசு சிவத்தம்பி. உலகத் தமிழறிஞர்கள் மத்தியில் நன்கு அறியப்பட்டவர் அறிஞர் சிவத்தம்பி. தனது இள, முதுமாணிப் பட்டங்களைப் பேராதனைப் பல்கலைக் கழகத்திலும், கலாநிதிப்பட்ட ஆய்வை இங்கிலாந்து பேர்மிங்காம் பல்கலைக்கழகத்திலும் பெற்றுக் கொண்ட இவர் இலக்கியத் திறனாய்வு, இலக்கிய வரலாறு, சமூக வரலாறு, நாடகமும் அரங்கியலும், யாழ்ப்பாணம் எனப் பல்வேறு துறைகளில் ஈடுபாடுடையவர்.

இவர் கேம்பிறிட்ஜ், பேர்கிளி, காவாட், உப்சலா, சென்னை, தஞ்சாவூர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் உட்பட பல பல்கலைக்கழகங்களில் முதுநிலை ஆய்வாளராகவும் வருகைப் பேராசிரியராகவும் ஆய்வுகளையும் விரிவுரைகளையும் மேற்கொண்ட அறிஞர். தமிழிலும், ஆங்கிலத்திலும் நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளையும், நாற்பதிற்கும் மேற்பட்ட சிற்றாய்வேடுகளையும் நூல்களையும் எழுதி வெளியிட்ட பேரறிஞர், மூதறிஞர் எனும் தகுதிகளுடைய பேராசிரியர் ஆடி மாதம் 2011 இல் இயற்கை எய்தினார்.

தொடரும்...

நன்றி : தெரியத் தெரியத் தெரியாமைத் தெரியும்

# ஒட்டுவாரொட்டி

முனைவர் ஆ. அரிமாப்பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"அடடா மழைடா அட மழைடா
அழகா சிரிச்சா புயல் மழைடா
அடடா மழைடா அட மழைடா
அழகா சிரிச்சா புயல் மழைடா"
(படம்:பையா, பாடல்: நா. முத்துக்குமார்)

அள் = செறிவு, அள் + து = அடு.
அடு – செறிவாக, சேர், திரள், திணி >அடை, அடைவு
அடுத்தல் – சேர்தல்,
அடுத்தடுத்து – தொடர்தல், இடைவெளி விடாது நெருங்குதல், நெருக்குதல்; இடையறாது தொடர்தல்.

' ஐப்பசி கார்த்திகை அடைமழை'

அடுத்தடுத்துத் தாள் ஒட்டுவது அட்டை
அடுத்தடுத்துப் பெய்யும் மழை அடுமழை – அடைமழை

"காவலனை ஆக வழிபட்டார், மற்று அவன்
ஏவல் வினை செய்திருந்தார்க்கு உதவு அடுத்தல்–
ஆ அணைய நின்றதன் கன்று, முலை இருப்ப,
தாய் அணல் தான் சுவைத்தற்று."
(பழமொழி நானூறு – 274)

"அப்பிலே தோய்த்திட்டு அடுத்தடுத்து நாம்அதனைத்
தப்பினால் நம்மையது தப்பாதோ? – இப்புவியில்
இக்கலிங்கம் போனால் என்? ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை"
(இரட்டைப் புலவர்கள்)

அடுத்துக் கெடுத்தல் – நெருங்கிக் கெடுத்தல்.

ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கி இருக்கும் மலைத்தொடர் அடுக்கம் எனப்பட்டது.
(folded mountains)

"பலா அமல் அடுக்கம் புலாவ ஈர்க்கும்
கழை நரல் சிலம்பின் ஆங்கண்,."
(அகநானூறு – 8)

"இருங் கலை ஓர்ப்ப இசைஇ, காண்வர,
கருங் கோல் குறிஞ்சி அடுக்கம் பாட,"
புறநானூறு 374

அடுக்கு – அடுக்கம்(folded mountain),
அடுக்ககம் – Flat, Apartment.
புத்தகம் அடுக்கி வை, புத்தக அடுக்கு (book rack),

சாப்பாட்டு அடுக்கு, பித்தளை அடுக்கு, எஃகுமுறி அடுக்கு
(tiffin carrier)
அடுக்கிவரல் – தொடர்ந்து வரல்

பல்லார் பகை கொளலின் பத்து அடுத்து தீமைத்தே
நல்லார் தொடர் கைவிடல்.
(திருக்குறள் 450)
பத்து அடுத்து – பத்து மடங்கு

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடியுண் டாயினும் இல். 1005

அடு – அடங்கு (contain) – அடக்கு (push)

"இந்தப் பையில் எல்லாத் துணிகளும் அடங்கவில்லை; எப்படியாவது அடக்கப் பார்க்கிறேன்"

அடு – அடர் – அடர்த்தி

".. உண்ணு நீர் வேட்டேன்" என வந்தார்க்கு, அன்னை
அடர் பொற் சிறகத்தில் வாக்கி, "சுடரிழாய்!
உண்ணு நீர் ஊட்டி வா!" என்றாள்."
(கலித்தொகை)

அடு – அடை – அடைசல் 'ஒரே அடைப்பாசாரமாக இருக்கிறது' – பேச்சுவழக்கு.

(ஒட்டுவாரொட்டி = ஒட்டுவார் ஒட்டி. ஒட்டு – ஒற்று – தொற்று – தொற்று நோய் contagious. தமிழ்நாட்டில் அண்மைக்காலமாக, மிக வேகமாகப்பரவிவரும் ஒட்டுவாரொட்டி! யாரேனும் நடிகர் ஒருவர் உரத்துப் பேசி நடித்தால் உடனே 'எங்கள் தலைவரே, வருங்கால முதல்வரே' எனச் சுவரொட்டி ஒட்டுவது. யாரேனும் புதிய கட்சி ஒன்றைத் தொடங்கினால் போதும், உடனே 'வருங்கால முதல்வரே, எங்கள் நிரந்தர முதல்வரே' எனச் சுவரொட்டி ஒட்டுவது! தமிழ்நாட்டில் மட்டும் இது தீராத தலைவலி)

அட்டு – ஒட்டு (ஒற்று) – உத்தரவுகளை ஒட்டி நடத்தல் adhere.

அட்டும் – ஒட்டும் பசை adhesive.

அட்டு – ஒட்டும் அழுக்கு (இக்கால இளைஞர்கள் 'அது ஒரு அட்டு பீசு, அட்டு ஃபிகர்' என்கின்றனர்.)

அட்டித்தல் – அண்டித்தல் – அண்டிப்பிழைத்தல்.

தொடர்ந்து திணிக்கும்போது பிதுக்கம் ஏற்படும். அண்டித்துப் பிதுக்கம் ஏற்படும் செயல் பழத்தினுள் ஏற்படும் போது கொட்டை பிதுங்கி முந்திரிக் கொட்டை ஆகிறது. இதை அண்டிக்கொட்டை, அண்டிப்பருப்பு என்றும் கூறுவர்.

கூரையை ஒட்டி அமைக்கப்படும் சிறு மாடி 'அட்டம்' எனப்படுகிறது. இதைக் கொங்குத் தமிழில் 'அட்டாலி' என்கிறார்களாம். ஆங்கிலத்தில் attic.

கழுத்தை ஒட்டி, அட்டி அணிவது அட்டிகையாம்.

சேர்தல், சேர்த்தல் என்னும் பொருள்தரும் சொற்கள் பலவும் அடு என்னும் வேர்ச்சொல்லிலிருந்து பிறந்துள்ளன.

அடு > Add – addition – addendum – attach..

add (v.)
late 14c., "to join or unite (something to something else)," from Latin addere"add to, join, attach, place upon," literal and figurative, from ad "to" (see ad–) + –dere, combining form meaning "to put, place," from dare "to give" (from PIE root *do– "to give"). Intransitive meaning "to do sums, do addition" also is from late 14c. Related: Added; adding. To add up is from 1754; in the figurative meaning "make sense," 1942. Adding machine "machine to cast up large sums" is from 1822.

**ஊழியம்செய் தமிழுக்குத் துறைதோறும்**
**துறைதோறும் உணர்ச்சி கொண்டே!**
– பாவேந்தர் பாரதிதாசன்

# முதுகுளம் – அதைச்சுற்றியுள்ள ஊர்களின் காரணப்பெயர்கள்

அண்டனூர்சுரா
பட்டதாரி கணித ஆசிரியர்,
முதுகுளம், கந்தர்வகோட்டை, புதுக்கோட்டைமாவட்டம்



இன்றைய புதுக்கோட்டை – தஞ்சாவூர் மாவட்டங்கள் சந்தித்துக்கொள்ளும் பகுதி. ஒரு காலத்தில் முல்லை நிலமாக இருந்திருக்கிறது. முல்லை என்பது காடுகள். சோழர்களின் ஆட்சிக் காலத்திற்கும் முன்பு இப்பகுதிகள் கானாடு, கோனாடு என அழைக்கப்பட்டன. புறநானூறு 150 ஆவது பாடல் குறிப்பிடும் "காட்டு நாட்டோம்" என்கிற வரியும் நற்றிணை 59 ஆவது பாடல் குறிப்பிடும் "வன்புலக் காட்டு நாட்டதுவே" என்கிற வரியும் இன்றைய புதுக்கோட்டை பகுதியைக் குறிப்பிடும் வரிகளென ஆய்வாளர்கள் குறிப்பிடுகிறார்கள்.

காட்டு நாடு என்பதே கானாடு. இந்நிலம் பெரும் உட்பிரிவுக் கொண்டு கோனாடு ஆனது. பிறகு கானாடு என்பதன் எல்லை சுருங்கி கோனாடு பெரும் பரப்பானது. கோனாடு வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டன. சோழவளநாடு, ஜெயசிங்ககுலவளநாடு, பாண்டிக்குலாசனி வளநாடு,... இப்படியாக, கானாடு பனங்காட்டு நாடு, செங்காட்டு நாடு ஆகின.

இன்றைய புதுக்கோட்டையின் கந்தர்வகோட்டை பகுதிகள் கோனாடு பரப்பிற்குள் அடைபடுவதற்கும் முன்பு கானாடாக இருந்தவை என்பதை இன்றைய ஊர்ப்பெயர்களைக் கொண்டு புரிந்துகொள்ளலாம். புதுக்கோட்டை மாவட்டத்தின் வடக்கு எல்லை ஊர்களாக புனல்குளம், முதுகுளம், காடவராயன்பட்டி, மஞ்சப்பேட்டை, அரியாணிப்பட்டி, மெய்க்குடிப்பட்டி, ஆனைவிழுந்தான் கேணி, புதுநகர் ஆகிய ஊர்கள் உள்ளன. இப்பெயர்கள் யாவும் முல்லை நிலத்துடன் தொடர்புடையவை.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்களின் நீர்நிலைகள் பண்டைய தமிழர்கள் வெவ்வேறு பெயர்களால் அழைத்தார்கள்.

**குறிஞ்சி நில நீர் நிலைகள்**

சுனை, அருவி, சிற்றாறு

**முல்லை நில நீர் நிலைகள்**

காட்டாறு, புனற்குளம்

**மருத நீர் நிலைகள்**

ஆறு, பொய்கை, சிற்றாறு

**நெய்தல் நில நீர்நிலைகள்**

மணற்கேணி, உவக்குழி

**பாலை நில நீர்நிலைகள்**

சுவல், கிணறு, புனற்குளம்

இன்றைக்குப் பொனக்குளம், புனக்குளம், புனல்குளம் என அழைக்கப்படும் இவ்வூர் புனற்குளம் என்கிற பண்டைய தமிழ்ச் சொல்லிருந்து திரிந்தது. புனல்குளம் என்பது முல்லை நில நீர் நிலையின் பெயர். புனல் என்பதற்குப் பரந்த நீர்ப்பரப்பு என்று பொருள். மேலும் புனல் என்பதற்குக் கொல்லை என்றொரு பொருள் உண்டு. இதன்படி புனல்குளம் என்பதைக் கொல்லையும் குளமும் கொண்ட ஊர் என்று பொருள் கொள்ளலாம்.

**மூதூர்குளம்**

புனல் குளத்தைச் சுற்றி பல குளம் ஊர்கள் உண்டு. முதுகுளம், குறுங்குளம், மருங்குளம், தின்னக்குளம் என்று. இவ்வூர்களில் தொன்மையான ஊராக இருப்பது முதுகுளம். செம்மண் பூமி. எல்லா வகை வேளாண்மைக்கும் உகந்த நிலம்.

முதுகுளம் என்பது மூத்த குடிகள் குடியேறிய ஊர். அதாவது, மூதூர்குளம். மூதூர்

என்றால் பழைமையான ஊர், தொன்மையான ஊர், மூத்த குடிகள் கொண்ட ஊர் என்று பொருள். குளத்தை ஆதாரமாகக் கொண்டு குடியேறியதால் அதற்கு மூதூர்குளம் என்று பெயர். இப்பெயர் மெல்ல திரிந்து மூதூர்குளம் – முதூகுளம் – முதுகுளம் என்றாகியிருக்கிறது. புனற்குளம், முதுகுளம் இரண்டும் குளத்தை ஆதாரமாகக் கொண்ட அருகமை ஊர்கள்.

### மஞ்சனத்தி

நீர் நிலைக்கும் அருகில் பயன்பாடற்ற புறம்போக்கு நிலத்தைச் சோழர்கள் 'மஞ்சனத்தி' என்கிற பெயரால் குறித்தார்கள். இச்சொல் குறித்த சோழர்காலக் கல்வெட்டுகள் உண்டு. இந்த நிலம் வேளாண்மைக்கு அவ்வளவாக உதவாத நிலம். இந்நிலத்தில் குடியேறியவர்கள் வேளாண் தொழிற்கருவிகள் செய்யும் பட்டர்களாக இருந்தார்கள். ஆகவே இவ்வூர் மஞ்சனத்திப்பட்டு என்று அழைக்கப்பட்டது. பிறகு அது மெல்ல திரிந்து மஞ்சனத்திப்பட்டு, மஞ்சனப்பேட்டு, மஞ்சப்பேட்டு, மஞ்சப்பேட்டை என்றானது.

மஞ்சம்பட்டி என்றோர் ஊர் இப்பகுதியில் உண்டு. அண்டனிக்குளத்திற்கு அருகில் இவ்வூர் இருக்கிறது. மஞ்சனத்தி நிலத்தில் உருவான சிறிய ஊர் மஞ்சனத்திப்பட்டி. பிறகு இவ்வூர் மெல்ல திரிந்து மஞ்சம்பட்டி என்றானது. மஞ்சம்பேட்டை, மஞ்சம்பட்டி இவ்விரு ஊர்களும் குளத்தையொட்டிய புறம்போக்கு நிலத்தில் அமையப் பெற்ற ஊர்கள்.

### காடவரையன்

காடவராயன்பட்டி புனல்குளத்திற்கு அருகிலுள்ள ஊர். காடுகளை அழித்து குடியேறிய நிலம். அரையன் என்றால் அரசு அதிகாரிகள் என்று பொருள்.

அதிஅரையன் – அரசுத் தலைமை,

பேரரையன் – அரையனை விட பதவியில் உயர்ந்தோர்,

பல்லவதரையன் – பல்லவ வழி வந்த அரையர்கள்

வில்லவதரையன் – சேர மன்னர்களின் அதிகாரிகள்

மீனவதரையன் – பாண்டியர்களின் அரசு அதிகாரிகள்,

ஈழதரையன் – ஈழ நாட்டு அரசு அதிகாரிகள்,

காடவரையன் – காடுகளை நிருவகித்தவன்

வரலாற்றில் காடவராயர் என்பவர்கள் பல்லவர்கள். சோழராட்சியை நிறுவிய முதலாம் ஆதித்த கரிகாலன் தொண்டை மண்டலத்தை வெற்றி கண்டு பல்லவ ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்தான். பல்லவ வீழ்ச்சிக்குப் பிறகு பல்லவ அதிகாரிகள் தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்தார்கள். இவர்கள் காடுகளை அழித்து ஊர், பட்டிகளை உருவாக்கினார்கள். அப்படியாக உருவான ஊர் காடவரையன்பட்டி– காடவராயன்பட்டி. இதைத்தான் பட்டினப்பாலை "காடு கொன்று நாடாக்கி" என்று பாடுகிறது.

### அரியாணி

காடவராயன்பட்டியில் குடியேறிய மக்கள் உணவு ஆதாரத்திற்காகப் புனற்குளத்தை ஆதாரமாகக் கொண்டு உழுது, காட்டு நெல் வகை நெல்லை விதைத்துப் பயிரிட்டார்கள். அந்த நெல்லின் பெயர் 'அரியாணி'. வறட்சியான பகுதியில் விளையும் நெல். இந்த வகை நெல் விளைந்த நிலப்பகுதி அரியாணிப்பட்டி என்றானது.

### மேய்க்குடி

இப்பகுதியில் மேய்ச்சல் கால்நடைகளுடன் குடியேறிய மக்கள் மேய்க்குடி ஆனார்கள். அவர்களால் அமையப்பெற்ற ஊர் மேய்க்குடிப்பட்டி. இவ்வூர் தற்போது மெய்க்குடிப்பட்டி என்றாகியிருக்கிறது.

### ஆனைவிழுந்தான்

ஆனைவிழுந்தான் கேணி என்கிற ஊரும் காடுடன் தொடர்புடைய ஊரே.

ஆனை விழுந்தான் என்பது யானைகளை பெருங்காட்டிலிருந்து விரட்டிவந்து பெரும் பள்ளத்தில் இறக்கி, அதன் சினத்தை அடக்கி, மனிதப் பயன்பாட்டிற்குப் பழக்கும் தொழிலுக்கு ஆனைவிழுந்தான் என்று பெயர். இந்தத் தொழிற்முறை பழக்கம் காட்டின் மையப்பகுதியில் நடந்தேறும். பரந்த நிலத்திற்குக் காணி என்று பெயர். ஆனைவிழுந்தான் காணி என்கிற நிலப்பகுதி மெல்ல திரிந்து ஆனைவிழுந்தான்கேணி என்றாகியிருக்கிறது.

### புதுக்குடி

மேய்க்குடிப்பட்டி என்கிற ஊருக்கு அருகில் புதுநகர் என்றோர் ஊர் இருக்கிறது. ஒரு காலத்தில் இவ்வூர் புதுக்குடி என்று அழைக்கப்பட்டது. மேய்க்குடி – புதுக்குடி. புதுக்கோட்டை மாவட்டமாக அறிவிக்கப்படாததற்கும் முன்பு இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்திற்குட்பட்ட ஊராக இருந்தது. இவ்வூருக்கு மேனாள் முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா அவர்கள் தண்ணீர்த்தொட்டி திறக்க வந்தார். அன்றைய தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் திரு. டி.கே.எஸ். பழனியப்பன் இவ்வூரைப் பார்வையிட்டு புதுக்குடி பெயரிலுள்ள 'குடி'யை நீக்கி புதுநகர் என்று மாற்ற சம்மதம் கேட்டார். ஊரார்கள் இதற்கு இசைவு தெரிவிக்க புதுக்குடி என்கிற ஊர் புதுநகர் ஆனது. ( தகவல் – சாமியய்யா, ஓய்வு பெற்ற அதிகாரி).

### காட்டாறு

இவ்வூர்கள் யாவும் முல்லை என்கிற காட்டுப் பகுதியில் அமைந்த ஊர்கள் என்பதற்கு இப்பகுதியில் ஓடும் அக்னி ஆறு ஆதாரமாக இருக்கிறது. இந்த ஆறு குளத்தூர் கண்மாயிலிருந்து தொடங்கி, பெருங்களூர், மழையூர், வாராப்பூர், கரம்பக்குடி எனும் பெரும் ஊர்கள் வழியே வங்கக் கடலில் கலக்கிறது. இந்த ஆற்றை வரலாற்றுக் குறிப்புகள் 'அஞ்ஞான விமோசனி ஆறு' என்று குறிப்பிடுகிறது. அதாவது 'அறியாமையிலிருந்து விடுவிக்கும் ஆறு' என்பது இதன் பொருள். ஆனால், இப்பகுதி மக்கள் இந்த ஆற்றை அழைப்பது 'காட்டாறு' என்று.

புதுக்கோட்டை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து நிலங்களால் அமையப் பெற்ற ஊர். இதில் முல்லை பெரும்பகுதியாகக் கொண்டது. அதை உறுதிப்படுத்தும் விதமாக மேற்காணும் ஊர்ப்பெயர்கள் அமைந்திருக்கின்றன.

"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லினாகும் என்மனார் புலவர்"

–தொல்.பெய. 2

**பொருள்**

சொல்லுக்குப் பொருண்மை, சொன்மை என இரு பண்புகள் உள்ளன எனக் கூறுவர் அறிவுரையோர்.



# ஒரு குறளில் ஐந்து வேற்றுமை

முனைவர் ப. கொழந்தசாமி,
புதுச்சேரி

அற இலக்கியமான திருக்குறள் மனித வளங்களை இனங்காட்டி முன்னேறத் தூண்டுவதோடு , மனிதவளத் தளத்தில் உள்ள தனிமனித வேறுபாடுகளையும் சுட்டுகின்றது. கல்வியாலும் பட்டறிவினாலும் உயர்திணையாகிய மனிதன் அறிவாற்றல், திட்டமிடல், செயல்திறன், கூட்டு முயற்சி, இயற்கையையும் விலங்குகளையும் கருவிகளையும் கையாள்கின்ற திறமை போன்றவற்றால் நிகழ் வாழ்க்கையை வளமாக்கிக்கொள்வதோடு, அறிவாக்க மேம்பாட்டிலும் / கருவிகளைக் கண்டறிந்து செயல்பாடுகளை விரைவாகவும் நுட்பமாகவும் குறைந்த செலவில் நிறைவேற்றுகின்ற புத்தாக்கங்களையும் படைத்துப் பயன்கொள்கின்றான். தேடித் தின்றவன் விளைவிப்பவனாக, கலப்பை/ காளை / நீரைத் தேக்கிப் பாய்ச்சல் / உணவுப் பொருள் சேமிப்புப் போன்றவற்றால் உற்பத்தியாளனானான். இதனால் வளர்ச்சி வாய்க்கின்றது; வாய்ப்புப் பெருகுகின்றது. இக் கூறுகள் மனிதவளமை / மேலாண்மை ஆகிய தளங்களில் வினையாற்றுவதை வள்ளுவம் வளமையான கலைச்சொற்களால் எடுத்துரைக்கின்றது. அதோடு தொடரியல் / வேற்றுமை இலக்கண நுட்பங்களையும் செவ்வனே கையாண்டுள்ளது. இக் கட்டுரையில் தெரிந்து வினையாடல் அதிகாரத்தின் 517ஆம் குறட்பாவில் மனிதவள மேலாண்மையை விளக்க வள்ளுவர் வேற்றுமை உருபுகளைச் செவ்வனே கையாண்டுள்ளமை விளக்கப்படுகின்றது.

இதனை இதனால் இவன்முடிக்கும்
என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல் (517)

என்னும் குறட்பாவில் ஐ, ஆல், எழுவாய் , ஐ, கண் ஆகிய வேற்றுமைகள் இயல்கின்றன.

- நீ என்பது தோன்றா எழுவாயான முதல் வேற்றுமை
- இதனை, அதனை ஆகியன செயப்படுபொருளான இரண்டாம் வேற்றுமை
- இதனால் என்பது கருவிப் பொருளிய மூன்றாம் வேற்றுமை
- அவன்கண் என்பது இடப்பொருள் ஏழாம் வேற்றுமை
- எழுவாயாக அமைகின்ற, முடிவெடுக்கின்ற நீ என்னும் முன்னிலை,

செயலின் இயல்பையும் தேவைப்படுகின்ற கருவிகளையும் செய்பவனின் தகுதி / திறன்/ ஈடுபாடு / உள்ள உறுதி ஆகியவற்றையும் ஆராய்ந்து முடிவெடுத்து, அதைத் திறனாளியிடம் ஒப்படைத்துச் செயலின் முழு வெற்றியையும் வாய்ப்பாக்கலாம் என்னும் ஆட்சிமைக் கொள்கை இவண் வகுத்துரைக்கப்படுகின்றது. இந்தத் திட்டமிடல் நுட்பத்தை இன்றைய வல்லுநர்கள் விரிவாக விளக்குகின்றனர்; வள்ளுவரும் வகுத்துரைத்துள்ளார். அதற்கு வேற்றுமை அமைப்பும் வாய்ப்பாகியுள்ளது. இவ்வாறாக, குறட்பாக்களின் இலக்கண அமைப்பும் குறட்பாவின் பொருண்மையை அறிய வாய்ப்பாகின்றது.

பயன்பட்டவை

தமிழ் இணையக் கல்விக்கழகத் தரவுகள்.

**********

வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை

(குறள் 872)

# தமிழ்க் கலைக்கழகத்தின் 139–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழகத்தின் 139–ஆவது கூட்டம் 10.08.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ. மதிவாணன், திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். திரு. ஆ. அரிமாப் பாமகன், மொழிபெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர்கள் திருமதி த. இளவேனில் முல்லை, திருமதி இரா. சித்ரா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 200 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது. ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

Bubbly – பூரிப்பு

Dadaist –விழுமிய மீறல்

Demo Videos –செயல்விளக்கக் காணொலிகள்

Daffadowndilly –ஒளிரும் மஞ்சள் நிறம்

Dusky Light – அந்தியொளி

Flub–குளறுபடி

Palpitation–படபடப்பு

Roller Skate – சறுக்கு உருளை

Spruik–விதந்துரை

Steam Jacket –நீராவி மேலுறை

# தமிழ்க் கலைக்கழகத்தின் 140–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 140–ஆவது கூட்டம் 17.08.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மொழிபெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர்கள் திருமதி த. இளவேனில் முல்லை, திருமதி இரா. சித்ரா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவன உதவிப் பேராசிரியர் முனைவர் து. ஜானகி, முனைவர் ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு, மொழிபெயர்ப்பு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 216 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

## உணவு
### ஒருபொருட் பன்மொழி

அடிசில்
உண்டி
உணவு
உணா
ஊண்
சாப்பாடு
துப்பு
பசிப்பிணி மருந்து

# இளைய தலைமுறையினர் வாழ்வியல் சடங்குகளில் தாய்மொழியாம் தமிழைப் பயன்படுத்த வேண்டும்! அகரமுதலி இயக்கக இயக்குநர் வலியுறுத்தல்!



தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் திருவள்ளூர் பெருவாயல் டி.ஜெ.எஸ். கலை மற்றும் அறிவியல் கல்லூரி இணைந்து நடத்திய தமிழ் இலக்கிய மன்ற விழா, கலைச்சொல்லாக்கம் மற்றும் அகராதியியல் பயிலரங்கம் 17.08.2023ஆம் நாள், சிறப்பாக நடைபெற்றது. பொறியியல் கல்லூரிக் கருத்தரங்க அறையில் நடைபெற்ற நிகழ்வில், தமிழ்த்துறைத் தலைவர் பேரா. மகாலட்சுமி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் இலட்சுமிபதி, கல்லூரி இயக்குநர் திரு. கபிலன் ஆகிய இருவரும் வாழ்த்துரை வழங்கினார்கள். டி.ஜெ.எஸ். கல்விக்குழுமத் தலைவர் திரு. டி.ஜெ. கோவிந்தராஜன் அவர்கள் தலைமையுரையாற்ற, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டார். அவர் தம் சிறப்புரையில், "இளைய தலைமுறை மாணவர்கள் தமிழை வாழ்வியல் மொழியாகக் கொள்ள வேண்டும். திருமணம், புதுமனைப் புகுவிழா போன்ற இன்பியல் சடங்குளோ, இறப்பு போன்ற துன்பியல் சடங்குகளோ எதுவாயினும் அதில் தாய்மொழியாம் தமிழின் பயன்பாட்டை முன்னெடுக்க வேண்டும். தமிழ்நாடு அரசின் திட்டத்தைச் சுட்டிக்காட்டி அன்னைத்தமிழில் ஆலய வழிபாட்டினை ஊக்குவிக்க வேண்டும். வீட்டிலும், நட்புறவுகளிடமும் தாய்த்தமிழில் பேசுவதையும், குழந்தைகளுக்கு இன்தமிழ்ப் பெயர் சூட்டுவதையும் இலக்காகக் கொண்டு செயலாற்ற வேண்டும் " என்றும் தெரிவித்தார்.அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி.பாலசுப்பிரமணியன் அவர்கள் "அகராதியியல் நோக்கும் போக்கும்" குறித்து விளக்கவுரையாற்ற, தொகுப்பாளர் திரு. வே. பிரபு, பயிலரங்கின் நோக்கம் குறித்து உரையாற்றினார். நிகழ்வில், கல்லூரியின் நிருவாக இயக்குநர் மற்றும் செயலாளர் டி.ஜெ. ஆறுமுகம், துணைத்தலைவர் திரு. டி.ஜெ. தேசமுத்து, இயக்குநர்கள் திரு. பழனி, திரு. தினேஷ், திரு. விஜயகுமார், திரு. தமிழரசன், நிருவாக அலுவலர் திரு. ஏழுமலை ஆகியோருடன், கல்லூரிப் பேராசிரியர்கள், மாணவ – மாணவிகள் உள்பட பலர் பங்கேற்றுச் சிறப்பித்தனர். நிகழ்வின் இறுதியாக உதவிப் பேராசிரியர் திரு.விஜய் நன்றியுரையாற்றினார்.

# சென்னை, குமாரராணி மீனா முத்தையா கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சி!









தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை, குமாரராணி மீனா முத்தையா கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சி 21.08.2023ஆம் நாள் தொடங்கப்பெற்றது. இளங்கலை கணினி அறிவியல், வணிக நிருவாகவியல், கணக்கியல் நிதி, கணினிச் செயல்பாடு ஆகிய நான்கு துறைகளைச் சேர்ந்த 12 மாணவ – மாணவிகளுக்கு 25.08.2023 ஆம் நாள் வரை இந்த அகப்பயிற்சி வழங்கப்பட்டது.

அகப்பயிற்சியின் தொடக்கநாள் நிகழ்வில் தலைமையேற்றுப் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், எந்தத்துறை மாணவர்களாக இருந்தாலும் தங்கள் துறைசார்ந்த கலைச்சொற்களை உருவாக்கும் ஆற்றலையும், தங்கள் துறைசார்ந்த சொற்களுக்குப் பொருள் சொல்லும் அகராதிகளை உருவாக்கும் ஆற்றலையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். தங்களின் துறையறிவும், தனித்திறனும் தாய்த்தமிழின் மேம்பாட்டுக்குப் பயன்படுவதை இலக்காகக் கொண்டு செயலாற்ற வேண்டும், அதற்கு அகரமுதலி இயக்ககம் நடத்தும் இந்த அகப்பயிற்சியை மாணவர்கள் நன்முறையில் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்றும் தெரிவித்தார். முன்னதாக, இயக்ககக் கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து அவர்கள் மாணவ – மாணவிகளுக்கு அகரமுதலி இயக்ககத்தின் செயற்பாடுகள் குறித்து எடுத்துரைத்து, தமிழ்க் கணியச்சு, கணினி பயன்பாட்டிற்கான அடிப்படைச் செய்திகள் குறித்துச் செய்முறை விளக்கத்தோடு பயிற்சியளித்தார். 24.08.2023ஆம் நாள் திருமதி சுமதி கோவிந்தராஜன் அவர்கள் மாணவர்களின் கல்வி மேம்பாடு, வாழ்க்கை முன்னேற்றத்திற்குச் செய்ய வேண்டியவை குறித்தும், 25.08.2023ஆம் நாள், மொழிபெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர் திருமதி த. இளவேனில் முல்லை அவர்கள், "மொழிபெயர்ப்பும் கலைச்சொல்லாக்கமும்" என்ற பொருண்மையிலும் பயிற்சியளித்தனர். நிகழ்வில், கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் செ.ஜெபஜோதி புஷ்பம், தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் சி. மாலதி, இயக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள், பயிற்சித் திட்ட ஒருங்கிணைப்பாளர் முனைவர் வே. கார்த்தி உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# பொன்னேரி, ஸ்ரீதேவி கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ – மாணவிகளுக்கு அகப்பயிற்சி!











செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), பொன்னேரி, ஸ்ரீதேவி கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சியின் நிறைவு நிகழ்வில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார். 01.09.2023 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு நிகழ்வில் பேசிய அகரமுதலி இயக்குநர், உலகுக்கே அறத்தை உரைத்த மொழி நம் தமிழ்மொழி. அற இலக்கியங்களைக் கொண்ட மொழியாக மட்டுமல்லாமல், அறமொழியாகவே விளங்குகின்ற தமிழைத் தாய்மொழியாகப் பெற்றதற்குத் தமிழர்கள் அனைவரும் பெருமைகொள்ளவேண்டும்.

வீட்டிலுள்ளோரிடமும் நட்புகளிடமும் பிறமொழிக் கலப்பின்றிப் பேசுவதோடு அவர்களையும் அதற்குப் பழக்க வேண்டும். அடுத்த தலைமுறை குழந்தைகளுக்காவது அழகிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டச் செய்ய வேண்டும். தமிழிலேயே தலைப்பெழுத்திட்டுக் கையொப்பமிடுவதை இளைய தலைமுறை மாணவர்கள் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். மண்சார்ந்த உணவுமுறை, பண்பாடு சார்ந்த உடைப் பழக்கம், வழிபாட்டில் தூயதமிழ் ஆகியவற்றை மாணவர்கள் முன்னெடுக்க வேண்டும். மொத்தத்தில் தமிழை இளைய தலைமுறை மாணவர்கள் தம் வாழ்வியலாகக் கொண்டு செயலாற்றி வெற்றிபெற வேண்டும் என்று வாழ்த்தி, மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர் திரு. வே.பிரபு, ஸ்ரீதேவி கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் கா. சௌந்தரராசன், அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# சேலம், அரசு கலைக் கல்லூரியில் கலைச்சொல்லாக்கம், அகராதியியல், சொற்குவைப் பயிலரங்கம்!







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், சேலம், அரசு கலைக் கல்லூரி மற்றும் சிலம்பொலி செல்லப்பனார் தமிழ்க்காப்பு மன்றம் இணைந்து நடத்திய கலைச்சொல்லாக்கம், அகராதியியல் மற்றும் சொற்குவைப் பயிலரங்கம் 28.08.2023ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது.

பயிலரங்கில் செந்தமிழ்துச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் கலந்துகொண்டு, "அகராதியியலும் கலைச்சொல்லாக்கமும்" எனும் பொருண்மையில் சிறப்புரையாற்றினார். அவர்தம் உரையில், "பொதுவான சொற்களுக்கும் கலைச்சொற்களுக்கும் வேறுபாடுகள் உள்ளன. பொதுவான சொற்கள் அனைத்துத் தரப்பினருக்கும் பயன்படும் வகையில் இருக்கும். ஆனால் கலைச்சொற்கள் அந்தந்தத் துறைசார்ந்தவர்களுக்குப் பயன்படும் வகையில் சொற்சுருக்கத்தையும், பொருளாழத்தையும் கொண்டு துறைசார்ந்த வல்லுநர்களால் தரப்படுத்தப்பட்டவையாக இருக்கும். கலைச்சொல்லாக்கத்தின் தந்தை என்று போற்றப்படுகிற, ஆசுதிரியா நாட்டைச் சார்ந்த யூசின் உசுட்டர் என்பவர் கலைச்சொல்லாக்கம் என்பது கருத்து நிறைந்தும், சிறப்புமொழி வழங்கலோடும், தொழில்சார்ந்தும் அமைந்திருக்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார். இவர் கலைச்சொல்லாக்கச் செயற்பாட்டுக்காகவே 1967 ஆம் ஆண்டு பன்னாட்டுத் தொழில்நுட்பக் குழுவைத் தொடங்கிய சிறப்பிற்குரியவர்.

ஆனால் அவருக்கெல்லாம் முன்பாகவே தமிழ்நாட்டில் மூதறிஞர் இராசாசி அவர்கள் கலைச்சொற்கள் அடங்கிய நூலொன்றை 1936 ஆம் ஆண்டு

வெளியிட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து கலைச்சொல்லாக்கத்திற்கான பொது நெறிகளையும், கோட்பாடுகளையும் நாம் பெறமுடியும். தொன்மைமிகு சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பயிற்சி, அவை, குழாம் (குழு– குழுமம்) போன்ற கலைச்சொற்கள் இன்றளவும் அதே பொருண்மையில் பயன்பட்டுவருகின்றன. சரியான நெறிமுறையிலமைந்த உலகத் தரத்திலான கலைச்சொற்கள் சங்க இலக்கியத்தில் நிறைந்துள்ளன. இளைய தலைமுறை மாணவர்கள் அவற்றை அறிந்து கையாள வேண்டும். அதிலிருந்து புதிய கலைச்சொல்லாக்கங்களை உருவாக்கும் ஆற்றலையும் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

அரிய சொற்களுக்கான பொருள் விளக்கம் தருகின்ற அகராதிகளின் தொடக்கப் புள்ளியாகத் தொன்மைமிகு இலக்கண நூலான தொல்காப்பியம் அமைந்துள்ளது. அதன் பின் செய்யுள் வடிவில் பொருள் விளக்கம் தருகின்ற நிகண்டுகள் தோன்றின. மேலை நாட்டவர் வருகைக்குப் பின்னரே அகரவரிசையில் சொற்களுக்குப் பொருள் விளக்கம் தருகின்ற முறை வழக்கத்திற்கு வந்தது. 1594 ஆம் ஆண்டு சிதம்பர இரேவண சித்தர் அகராதி நிகண்டை இயற்றி, அகராதி என்ற பெயரையும் அறிமுகப்படுத்தினார். அதன்பின் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அகராதியானது இத்தாலி நாட்டைச் சார்ந்த வீரமாமுனிவரால் 1732 இல் தொகுக்கப்பெற்று 1824 இல் வெளிவந்த சதுரகராதியாகும். இதில் மீனவர், பாமரர், பாட்டாளிகள் உள்ளிட்டோரிடமிருந்து திரட்டிய அரும்பெறல் சொற்கள் பெயர், பொருள், தொடை, தொகை எனும் நான்கு பிரிவுகளில் இடம்பெற்றன.

அதன்பின் 12 தொகுதிகளைக் கொண்ட தமிழ்ப் பேரகராதி சென்னை பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டது. அதனைத் தொடர்ந்து தமிழ்நாடு அரசால் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை முதல் இயக்குநராகக் கொண்டு 1974இல் தொடங்கப்பெற்ற செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 12 மடலங்கள் 31 தொகுதிகள் கொண்ட வேர்ச்சொற்கள் மற்றும் இனச்சொற்களுடன் கூடிசெந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிகள் வெளியிடப்பட்டன. மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் Treasury – கருவூலம், Secret – கமுக்கம், மந்தணம் போன்ற கலைச்சொற்களைக் குறிப்பிட்டு விளக்கம் அளித்துள்ளார். இப்போதும் காலத்திற்கேற்ற பல்வேறு பொருண்மைகளில் அகரமுதலி இயக்ககம் அகராதிகளை வெளியிட்டுவருகிறது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தில் நாளிதுவரையில் 12 இலட்சத்து 18 ஆயிரத்து 749 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இந்த எண்ணிக்கையை மேலும் உயர்த்துவதற்குத்தான் இதுபோன்ற பயிலரங்குகள் நடத்தப்படுகின்றன. பேராசிரியர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் சொற்குவை வலைத்தளத்தைப் பயன்படுத்தி அதன் பயனைப் பரவலாக்கம் செய்வதோடு, தங்கள் கல்வியையும் ஆய்வையும் மேம்படுத்திக்கொள்ள வேண்டும்" என்று தெரிவித்தார்.

நிகழ்வில், கல்லூரி முதல்வர் முனைவர் நா. செண்பகலெட்சுமி தலைமையுரையாற்ற, சிலம்பொலி செல்லப்பனார் தமிழ்க்காப்பு மன்றம் சார்பில் அரசு மேனிலைப்பள்ளி மேனாள் தலைமையாசிரியர் திரு. இரா. மோகன்குமார் அவர்கள் முன்னிலை உரையாற்றினார். அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரையாற்ற, நிறைவாக முனைவர் நாகவேணி நன்றி கூறினார்.

# சேலம், அரசு மகளிர் கல்லூரி

# கலைச்சொல்லாக்கம், அகராதியியல், சொற்குவைப் பயிலரங்கம்!





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், சேலம், அரசினர் மகளிர் கலைக் கல்லூரி முதுகலை மற்றும் தமிழாய்வுத்துறை இணைந்து நடத்திய கலைச்சொல்லாக்கம், அகராதியியல் மற்றும் சொற்குவைப் பயிலரங்கம் 28.08.2023ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது.

நிகழ்வில், கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க. ரங்கநாயகி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் நா. காந்திமதி அவர்கள் தலைமையுரையாற்றினார்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் "அகராதியியல் (ம) கலைச்சொல்லாக்கம்" என்ற பொருண்மையில் சிறப்புரையாற்ற, சிலம்பொலி செல்லப்பனார் தமிழ்க்காப்பு மன்றம் சார்பில் அரசு மேனிலைப்பள்ளி மேனாள் தலைமையாசிரியர் திரு. இரா. மோகன்குமார் அவர்கள் முன்னிலை உரையாற்றினார்.

அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரையாற்ற, நிறைவாக கணித்தமிழ்ப் பேரவையின் செயலாளர் தமிழ்த்திரு முத்து இந்திரா நன்றி கூறினார்.

# சேலம், ஸ்ரீ சாரதா கலை (ம) அறிவியல் கல்லூரியில் கலைச்சொல்லாக்கம், அகராதியியல், சொற்குவைப் பயிலரங்கம்!





தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், சேலம், ஸ்ரீ சாரதா மகளிர் கல்லூரி இணைந்து நடத்திய சொற்குவைப் பயிலரங்கம் 28.08.2023ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது.

நிகழ்வில், கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ஆ. அம்பிகா அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் இரா. உமாராணி அவர்கள் தலைமையுரையாற்றினார்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் "அகராதியியல் (ம) கலைச்சொல்லாக்கம்" என்ற பொருண்மையில் சிறப்புரையாற்ற, அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே. பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரையாற்றினார். நிறைவாக முதுகலைத் தமிழ் மாணவி தமிழ்த்திரு ம. கிருபா நன்றி கூறினார்.

# இளையோர் பிறமொழிக் கலப்பின்றித் தமிழ்பேச வேண்டும்! அகப்பயிற்சி நிறைவு நாள் விழாவில் அகரமுதலி இயக்குநர் வலியுறுத்தல்!






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை, டாக்டர் எம்.ஜி.ஆர். ஜானகி கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகளுக்கான அகப்பயிற்சியின் நிறைவு நிகழ்வில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

11.09.2023 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு நிகழ்வில் பேசிய அகரமுதலி இயக்குநர், உலகமொழிகளின் தாய்மொழியாக விளங்குகிற தமிழ்மொழியைத் தாய்மொழியாகப் பெற்றதற்குத் தமிழர்கள் அனைவரும் பெருமைகொள்ள வேண்டும். தமிழ்த்துறை மாணவர்கள் வெறும் பாடங்களை மட்டும் பயில்பவர்கள் அல்லர், வாழ்வியல் அறங்களையும், மக்களின் மனங்களையும் படிப்பவர்கள். தமிழ்த்துறை மாணவர்கள் பன்மொழி அறிவோடு கலைச்சொல்லாக்கத் திறனையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். உணவு – உடை – வழிபாடு ஆகியவற்றில் இளைய தலைமுறை மாணவர்கள் தமிழ் மண் சார்ந்த மரபைப் பின்பற்றி, நம் தமிழினத்தின் பெருமையினைப் பறைசாற்ற வேண்டும். பிறமொழிக் கலப்பின்றிப் பேசுதல், அழகிய தமிழ்ப் பெயர் சூட்டுதல், தமிழிலேயே கையொப்பமிடுதல் ஆகியவற்றைத் தம் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். மொத்தத்தில் தமிழை இளைய தலைமுறை மாணவர்கள் தம் வாழ்வியலாகக் கொண்டு செயலாற்றி வெற்றிபெற வேண்டும் என்று வாழ்த்தி, மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன், அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# உலகத்தின் தாய்மொழி தமிழ்மொழி என்பதை உணர்ந்து உரைத்தவர் பேரறிஞர் அண்ணா! அகப்பயிற்சி நிறைவு நாள் விழாவில் அகரமுதலி இயக்குநர் பெருமிதம்!





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை, மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறை மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சியின் நிறைவு நிகழ்வில் அகரமுதலி இயக்கக இயக்குநரும், அகப்பயிற்சியின் இந்த அமர்வுக்கான ஒருங்கிணைப்பாளருமாகிய முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

15.09.2023 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு நிகழ்வில் பேசிய அகரமுதலி இயக்குநர், தென்னாட்டின் பெர்னாட்சா, இந்நாட்டின் இங்கர்சால் என்று போற்றப்படுகின்ற பேரறிஞர் அண்ணா அவர்கள் பல மேடைகளில் உலகமொழிகளின் தாய்மொழி நம் தமிழ்மொழி என்று முழங்கியிருக்கிறார். பன்மொழி கற்று, பல இலக்கியங்களைப் பழுதறக் கற்ற அந்தப் பேரறிஞரின் கருத்துக்கு மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் வேர்ச்சொல்லாய்வுச் சிந்தனைகள் அரண் சேர்த்தன. இத்தகு பெருமைவாய்ந்த தமிழைத் தாய்மொழியாகப் பெற்றதற்குத் தமிழர்கள் அனைவரும் பெருமைகொள்ள வேண்டும்.

அறமும் அறிவுச் செறிவும் புகட்டும் தமிழைப் பாட மொழியாக மட்டும் பயிலாமல் வாழ்வியல் மொழியாகவும் கடைப்பிடிக்க வேண்டும். பிறமொழிகளைக் கற்றுக்கொள்ளலாம். பிறமொழிகளை வாசிக்கலாம், ஆனால் தாய்தமிழை உயிராக நேசிக்க வேண்டும். பிறமொழிகளில் தமிழையும், தமிழ் பேசும் போது பிறமொழிகளையும் கலக்கக் கூடாது. அடுத்த தலைமுறை குழந்தைகளுக்காவது அழகிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டச் செய்ய வேண்டும். தமிழிலேயே தலைப்பெழுத்திட்டுக் கையொப்பமிடுவதை இளைய தலைமுறை மாணவர்கள் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். வழிபாடுகளில் தமிழையும் உணவு – உடைகளில் தமிழ் மரபையும் கடைப்பிடிக்க வேண்டும் என வாழ்த்தி, மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் நீ. இராஜசேகரன் நாயர், அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# செய்தி நறுக்குகள்

கல்பாக்கம், ஆக. 21-



தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக் கழகத்தின், 140வது கூட்டம், அகரமுதலி இயக்ககத்தில், இயக்குனர் கோ.விசயராகவன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், நா.க.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மொழிபெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர்கள் த.இளவேனில் முல்லை, இரா. சித்ரா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவன உதவிப் பேராசிரியர் து.ஜானகி, முனைவர் ஆ.அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு, மொழிபெயர்ப்பு மற்றும் அலுவல் சார் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் 208 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுனர் குழு ஏற்பளித்தது.


மாலை தமிழகம்
India's No1
TAMIL NADU
A.P.S. TRAVELS


## 'மாணவர்கள் கலைச்சொல்லாக்கம் மற்றும் அகராதி உருவாக்க திறனை வளர்த்துக்கொள்ள வேண்டும்!'



கல்பாக்கம், ஆக. 23-

## இளைய தலைமுறையினர் வாழ்வியல் சடங்குகளில் தாய்மொழியாம் தமிழைப் பயன்படுத்த வேண்டும்!

அகரமுதலி இயக்குனர் விசயராகவன் வேண்டுகோள்




மாலை தமிழகம்
India's No1
TAMIL NADU
RKG TRAVELS
www.maalaitamizhagam.com


## அகராதியியல் கலைச்சொல்லாக்க நெறிகளில் தமிழியல் ஆய்வு மாணவர்கள் கவனம் செலுத்த வேண்டும்: கோ.விசயராகவன்

கல்பாக்கம், ஆக. 31-



# செய்தி நறுக்குகள்



தினமணி
உலகத் தரத்திலான கலைச்சொற்கள் சங்க இலக்கியத்தில் நிறைந்துள்ளன
அகரமுதலித் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன்




மாலை தமிழகம்
சொற்சுவையின் சொல் எண்ணிக்கை ஒரு கோடியாக உயர்த்தப்பட வேண்டும்
தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக துணைவேந்தர் திருவள்ளுவன் வேண்டுகோள்!




முதல் ஓசை
இளைய தலைமுறையினராவது வாழ்வியல் சடங்குகளில் தாய்மொழியாம் தமிழைப் பயன்படுத்த வேண்டும்!
டி.ஜெ.எஸ். கல்லூரியில் அகரமுதலி இயக்குநர் பேச்சு
திருவள்ளூர்-ஆக.20-




தினமணி
அகராதியியல் ஆய்வு மலருக்கு கட்டுரைகளை அனுப்பலாம்
அகரமுதலி இயக்ககம் அழைப்பு





தமிழ்நாடு அரசு

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்


நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல் தளம்,

எண்: 75 சாந்தோம் நெடுஞ்சாலை, மே.ரா.செ.நகர், சென்னை – 600028.

044–29520509

agarathimalar2020@gmail.com


# தமிழ் அகராதியியல்நாள் விழா – 2023

# ஆய்வு மலருக்குக் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன !

**பொருண்மைகள் :** 1.மின்னகராதி காலத்தின் தேவை 2.கலைச்சொல்லாக்கமும் ஊடகத்துறையும் 3.குமுக வலைத்தளங்களில் கலைச்சொல் பயன்பாடு 4.கலைச்சொல்லாக்கமும் மொழிவளர்ச்சியும் 5.கணினித் தமிழ்வளர்ச்சியில் சிக்கல்களும் தீர்வுகளும் 6.தமிழ்ப் பத்தி(பக்தி) இலக்கியங்களில் காணப்படும் கலைச்சொற்கள் 7.ஓலைச்சுவடிகளில் காணப்படும் அருந்தமிழ்ச்சொற்கள் 8.கலைச்சொல்லாக்கமும் திரைத்துறையும் 9.தமிழில் மொழிக் கலப்பைக் களைதல் 10.வட்டார வழக்கில் சொல்லாக்கம் 11.தமிழ் அகராதியியலின் தோற்றமும் வளர்ச்சியும் 12.அகராதி வளர்ச்சியில் மேலைநாட்டினரின் பங்கு உள்ளிட்ட தலைப்புகளில் கட்டுரைகளைக் கணியச்சு செய்து மேற்கண்ட இயக்கக மின்னஞ்சலுக்கு 15/09/2023– ஆம் நாள் மாலை 5மணிக்குள் அனுப்ப வேண்டும். கட்டுரையினை ஏ4 அளவில் ஐந்து பக்கங்களுக்கு மிகாமல் ஒருங்குறி (யுனிக்கோடு) எழுத்துருவில், எழுத்தளவு11, வரி இடைவெளி 1.5–இல், சொற்செயலிக்கோப்பாக (Word Docoment file) அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறோம். கட்டுரைகள் தேர்வு (ம) சுருக்கத்தில் தேர்வுக் குழுவினரின் முடிவே இறுதியானது. முகவரி, தொலைபேசி எண், மின்னஞ்சல் முகவரி, ஒளிப்படம், தன்விளக்கக் குறிப்பு ஆகியவை கட்டாயம் கட்டுரையுடன் இணைத்து அனுப்ப வேண்டும்.

இயக்குநர்





செம்மொழித் தமிழ் வளர்ப்போம் செந்தமிழால் சேர்வோம்





தமிழ்நாடு அரசு

தமிழ் வளர்ச்சித் துறை

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,

சாந்தோம் நெடுஞ்சாலை, பி. இரா. செ. நகர், சென்னை – 600 028

pavanarviruthu@gmail.com 044-29520509

# தேவநேயப் பாவாணர் விருது – 2023

தமிழ் வேர்ச்சொல் ஆய்வு, அகராதி உருவாக்குதல் மற்றும் தனித்தமிழைப் போற்றுவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் தகுதிவாய்ந்த உள்நாட்டு அறிஞர் ஒருவருக்குத் 'தேவநேயப் பாவாணர் விருது' தமிழ்நாடு அரசால் வழங்கப்பெறவுள்ளது. விருதாளருக்கு உருபாய் இரண்டு இலக்கமும், ஒரு சவரன் தங்கப்பதக்கமும் தகுதியுரையும் வழங்கப்படும். விருதுபெறுவதற்குத் தகுதிவாய்ந்த தமிழறிஞர்கள் சொற்குவை.காம், (sorkuval.com) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தை நிரப்பி உரிய சான்றுகளுடன் இணைத்து 18.09.2023 ஆம் நாள் மாலை 5.30மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் வழியாகவோ அல்லது இயக்கக முகவரிக்கோ அனுப்ப வேண்டும்.

குறிப்பு : உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர்

செம்மொழித் தமிழ் காப்போம் !

செந்தமிழில் பேசுவோம் !





கலைஞர் 100 1924 – 2023

தமிழ்நாடு அரசு

தமிழ் வளர்ச்சித் துறை

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்


நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண் 75,

சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை – 600 028

Veeramamunivaraward@gmail.com

044–29520600




## வீரமாமுனிவர் விருது – 2023



தமிழ் அகராதிகளை வெளியிட்டு, அகராதியியல் துறையில் சிறந்த பங்களிப்பை நல்கிவரும் அகராதியியல் அறிஞர்களைப் போற்றி ஊக்கமளிக்கும் வகையில் 'வீரமாமுனிவர் விருது' தமிழ்நாடு அரசால் வழங்கப்பெறவுள்ளது. விருதாளருக்கு உருபாய் இரண்டு இலக்கமும், ஒரு சவரன் தங்கப்பதக்கமும், தகுதியுரையும் வழங்கப்படும். விருதுபெறுவதற்குத் தகுதிவாய்ந்த அகராதியியல் அறிஞர்கள் சொற்குவை.காம். (sorkuvai.com.) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தை நிரப்பி உரிய சான்றுகளுடன் இணைத்து 18.09.2023 ஆம் நாள் மாலை 5.30 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் வழியாகவோ அல்லது இயக்கக முகவரிக்கோ அனுப்ப வேண்டும்.

## வீரமாமுனிவர் விருதுக்கு விண்ணப்பிக்கத் தகுதியுடையோர்

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத பிறப்பால் வெளிநாட்டைச் சார்ந்த தகுதி வாய்ந்த அகராதியியல் அறிஞர்

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள வெளிநாடு வாழ் அகராதியியல் அறிஞர்

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், இந்தியாவின் பிற மாநிலங்களில் தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள அகராதியியல் அறிஞர்

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், தமிழ்நாட்டில் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள அகராதியியல் அறிஞர்

இயக்குநர்






Government of Tamil Nadu

Department of Tamil Development

# Directorate of Tami Etymological Dictionary Project

Urban Administrative Office Campus

First Floor, No.75, Santhome High Road, M.R.C. Nagar, Chennai – 600 028.

Veeramamunivaraward@gmail.com

044-29520600




## Veeramamunivar Award – 2023



In order to encourage and honour the Tamizh Scholars of Lexicography, who are taking efforts to publish Tamizh Lexicon, Tamil Nadu Government have given 'Veeramamunivar Award' including Two lakhs cash award and One Sovereign (One Pound) Gold Medal along with a citation.

Those Scholars who are elegible to receive the award can send the application which can be downloaded from the sorkuvai.com website. The filled up application with all appropriate certificates should be sent to the above mentioned e–mail ID or to the Postal Address of the Directorate of Tamil Etymological Dictionary Project, Urban Administrative Office Campus, First Floor, No. 75, Santhome High Road, M.R.C. Nagar, Chennai – 600 028. on or before 18.09.2023, evening 5.30 P.M.

ELEGIBILITY TO APPLY FOR THE AWARD OF VEERAMAMUNIVAR

The Applicant shall be a Scholar of excellence who has strided on the path of Veeramamunivar, replicating his literary and creative style: has produced minor literatures and has brought out translations and also who has been an out standing Scholar on Lexicography and who has also published Tamil dictionaries. He shall be a foreigner by birth and his mother tongue shall not be Tamil.

The Applicant shall be a Scholar of excellence living abroad who has strided on the path of Veeramamunivar, replicating his literary and creative style: has produced minor literature and has broughtout translations and also who has been an outstanding Scholar on Lexicography and who has also published Tamil Dictionaries.

The Applicant shall be a Scholar of excellence living in any State in India who has strided on the Path of Veeramamunivar, replicating his literary and creative style: has produced minor literatures and has brought out translations and also who has been an out standig Scholar on Lexicography and who has also published Tamil dictionaries.

The Applicant shall be a Scholar of excellence living in Tamil Nadu who has strided on the path of Veeramamunivar, replicating his literary and creative style: has produced minor literatures and has brought out translations and also who has been an out standing Scholar on Lexicography and who has published Tamil dictionaries.

Director



கலைஞர் 100
1924 – 2023

செம்மொழித் தமிழ் காப்போம்

செந்தமிழால் பேசுவோம்








தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை – 600 028
paavalarvirudu@gmail.com
044-29520509


# நற்றமிழ்ப் பாவலர் விருது – 2023

பிறமொழிக் கலப்பின்றி தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி, தம் கவிதைப் படைப்புகளை உருவாக்கும் மரபுக்கவிஞர், புதுக்கவிஞர்களிலிருந்து முறையே ஒவ்வொருவரைத் தேர்வு செய்து "நற்றமிழ்ப் பாவலர் விருதும்" உருபா 50,000/- பரிசுத்தொகையும், தங்கப் பதக்கத்தோடு பாராட்டுச் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதி வாய்ந்த பாவலர்கள் சொற்குவை. காம் (sorkuvai.com) என்ற வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி 16.09.2023 ஆம் நாள் மாலை 5.30 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும். தம் கவிதைப் படைப்புகளில் தூயதமிழ்ச்சொற்களே பயன்படுத்தப்படுகின்றன என்பதை உறுதிசெய்யும் சான்றுகளாகத் தம் கவிதை நூல்களையும் இணைத்து அனுப்ப வேண்டும்.

குறிப்பு : ஒருவரே புதுக்கவிதை, மரபுக்கவிதை இரண்டும் எழுதுபவராக இருந்தாலும் ஏதேனும் ஒரு பிரிவிற்குத்தான் விண்ணப்பிக்க வேண்டும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர்



செம்மொழித் தமிழ் காப்போம்

கலைஞர் 100 1924 - 2023

செந்தமிழால் பேசுவோம்





தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை - 600 028



oodagavirudu@gmail.com

044-29520509

# தூயதமிழ் ஊடக விருது – 2023

தூயதமிழ்ச் சொற்களையும், காலத்திற்கேற்ற புதிய கலைச்சொற்களையும் பயன்படுத்தி செய்திகளையும், நிகழ்ச்சிகளையும் வழங்கும் காட்சி, அச்சு ஊடகங்களிலிருந்து முறையே ஒவ்வொன்றைத் தேர்வு செய்து 'தூயதமிழ் ஊடக விருதும்' உருபா 50,000/- பரிசுத் தொகையும், தங்கப்பதக்கத்தோடு தகுதியுரைச் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதி வாய்ந்த ஊடகத்தார் சொற்குவை.காம் (sorkuvai.com) என்ற வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, தங்கள் ஊடகம் தூய தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்துவதனை உறுதிசெய்யும் சான்றுகளோடு இணைத்து வருகிற 18.09.2023ஆம் நாள் மாலை 5.30 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும்.

குறிப்பு : தமிழ்நாட்டில் இயங்கும் ஊடகங்கள் மட்டுமே விருதுக்கான தேர்வுக்கு எடுத்துக்கொள்ளப்படும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர்



நூற்றாண்டு
100
1924 - 2023

செம்மொழித் தமிழ் காப்போம்

செந்தமிழால் பேசுவோம்








தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை – 600 028
patralarvirudhu@gmail.com
044-29520509


# தூயதமிழ்ப் பற்றாளர் விருது – 2023

நடைமுறை வாழ்க்கையில் தூயதமிழிலேயே பேசுகின்ற தகுதி வாய்ந்த தூயதமிழ்ப் பற்றாளர்களிலிருந்து மாவட்டத்திற்கு ஒருவரைத் தேர்வு செய்து 'தூய தமிழ்ப் பற்றாளர் விருதும்' உருபா 20,000/– பரிசுத் தொகையும் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதிவாய்ந்த தமிழார்வலர்கள் சொற்குவைகாம் (sorkuvai.com) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து நிரப்பி 18.09.2023 ஆம் நாள் மாலை 5.30 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும். விண்ணப்பிப்போர் தமிழறிஞர்கள், அரசு அலுவலர்கள் (அ) பேராசிரியர்கள் இருவரிடம் தம் தனித்தமிழ்ப் பற்றை உறுதிசெய்து நற்சான்றிதழ் பெற்று இணைக்க வேண்டும். நற்சான்றளிப்போரின் ஒருபக்க அளவிலான தன்விளக்கக் குறிப்புகளையும் ஒளிப்படத்துடன் (Photo)இணைக்கவேண்டும்.

குறிப்பு: பணி நிமித்தம் உள்ளிட்ட காரணங்களினால் பிறந்த ஊருக்கான மாவட்டத்தை விட்டு வேறு மாவட்டத்திற்குச் சென்று 5 ஆண்டுகளுக்கு மேலாக அங்கு வாழ்வோர், தற்போது வாழும் மாவட்டத்தைக் குறிப்பிட்டு விண்ணப்பிக்க வேண்டும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும். கடந்த ஆண்டுகளில் தூயதமிழ்ப் பற்றாளர் விருதோ (அ) தூயதமிழ்ப் பற்றாளர் பரிசோ பெற்றவர்கள் விண்ணப்பிக்க வேண்டாம். கடைசி நாள் (18.09.2023) முடிந்ததும், விண்ணப்பிப்போரின் தமிழ்ப்பற்றை ஆராயும் வகையில் எந்த நாளில் வேண்டுமானாலும் முன்னறிவிப்பின்றி அலைபேசிவழி நேர்காணல் நடத்தப்பெறும்.

இயக்குநர்



கலைஞர் 100
1924 – 2023

**செம்மொழித் தமிழ் காப்போம்** **செந்தமிழால் பேசுவோம்**

தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை

  

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை – 600 028

patralarparisu@gmail.com 044-29520509

# தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு – 2023

நடைமுறை வாழ்க்கையில் தூயதமிழிலேயே பேசுகின்ற தகுதிவாய்ந்த தூயதமிழ்ப் பற்றாளர்களிலிருந்து மாநில அளவில் மூவரைத் தேர்வு செய்து 'தூய தமிழ்ப் பற்றாளர் பரிசும்' உருபா 5,000/– பரிசுத் தொகையும் சான்றிதழும் வழங்கப்படவுள்ளன. தகுதிவாய்ந்த தமிழன்பர்கள் சொற்குவை.காம் (sorkuvai.com) வலைத்தளத்திலுள்ள விண்ணப்பத்தைப் பதிவிறக்கம் செய்து நிரப்பி 18.09.2023 ஆம் நாள் மாலை 5.30 மணிக்குள் மேற்குறித்துள்ள மின்னஞ்சல் முகவரிக்கோ (அ) அலுவலக முகவரிக்கோ அனுப்ப வேண்டும். விண்ணப்பிப்போர் தமிழறிஞர்கள், அரசு அலுவலர்கள் (அ) பேராசிரியர்கள் இருவரிடம் தம் தனித்தமிழ்ப் பற்றை உறுதிசெய்து நற்சான்றிதழ் பெற்று இணைக்க வேண்டும். நற்சான்றளிப்போரின் ஒருபக்க அளவிலான தன்விளக்கக் குறிப்புகளையும் ஒளிப்படத்துடன் (Photo) இணைத்து அனுப்ப வேண்டும்

குறிப்பு : பணி நிமித்தம் உள்ளிட்ட காரணங்களினால் பிறந்த ஊருக்கான மாவட்டத்தை விட்டு வேறு மாவட்டத்திற்குச் சென்று 5 ஆண்டுகளுக்கு மேலாக அங்கு வாழ்வோர், தற்போது வாழும் மாவட்டத்தைக் குறிப்பிட்டு விண்ணப்பிக்க வேண்டும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும். கடந்த ஆண்டுகளில் தூயதமிழ்ப் பற்றாளர் விருதோ (அ) தூயதமிழ்ப் பற்றாளர் பரிசோ பெற்றவர்கள் விண்ணப்பிக்க வேண்டாம். கடைசி நாள் (18.09.2023) முடிந்ததும், விண்ணப்பித்தவரின் தமிழ்ப்பற்றை ஆராயும் வகையில் எந்த நாளில் வேண்டுமானாலும் முன்னறிவிப்பின்றி அலைபேசிவழி நேர்காணல் நடத்தப் பெறும்.

இயக்குநர்

## அகரமுதலி இயக்கக
## இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்

# 100ஆவது அமர்வு!

## பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர்கள் பங்கேற்பு!

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் வெள்ளிதோறும் நடத்தப்பெற்றுவரும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கத்தின் 100ஆவது அமர்வு 25.08.2023 ஆம் நாள் வெகு சிறப்பாக நடைபெற்றது. நிகழ்வில் தமிழ்ப் பல்கலைக்கழகம், தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர்கள் உள்பட பல தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், கலைச்சொல்லாக்க வல்லுநர்கள் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

"அகராதியியலாளர்கள், தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், ஊடக நண்பர்கள், மாணவச் செல்வங்கள், கலைச்சொல்லாக்கத்தில் ஈடுபட்டு 'சொற்குவை' வலைத்தளத்தில் அனைத்துத் துறைகளின் கலைச்சொற்கள் இடம்பெற வகை செய்ய வேண்டும்" என்ற மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் **திரு. மு.க.ஸ்டாலின்** அவர்களின் அறிவுறுத்தலுக்கிணங்க, பல்வேறு செயற்பாடுகளைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செய்துவருகிறது. அதன் ஒருபகுதியாக,



"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்!"

என்ற மகாகவி பாரதியாரின் வாய்மொழிக்கிணங்க, புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், இவ்வியக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெற்றுவருகிறது. பயிலரங்கின் ஒவ்வொரு அமர்விலும் அயல்நாட்டு அறிஞர்கள் மூவர், உள்நாட்டு அறிஞர்கள் இருவர் என மொத்தம் 5 அறிஞர்கள் ஆங்கிலமொழிக் கலைச்சொற்களுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்துவருகின்றனர்.

100ஆவது அமர்வில் அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் வரவேற்பு(ம)நோக்கவுரையாற்றினார்.

நிகழ்வில் தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் வி. திருவள்ளுவன் அவர்கள் பங்கேற்று வாழ்த்துரை வழங்கும்போது, "சொற்குவையில் தமிழ்ச்சொற்களின் எண்ணிக்கை தற்போது 12 இலட்சத்தைத் தாண்டியுள்ளது மகிழ்ச்சியளிப்பதாகவும், தொன்மைமிகு தமிழ்மொழி சொல்வளம் மிக்க மொழி என்பதால் அகரமுதலி இயக்ககத்தின் திறமிகு செயல்பாட்டால் சொற்குவையின் சொல் எண்ணிக்கை ஒருகோடியாக உயர்த்தப்பட வேண்டும் என்றும், சொல்வளத்தைக் காத்தால் மட்டுமே மொழி நலத்தைக் காக்க முடியும் என்றும்" தெரிவித்தார்.



அவரைத் தொடர்ந்து வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முதுமுனைவர் சோ. ஆறுமுகம் அவர்கள், "தொன்மை மிகு தமிழ்மொழியை முழுவதுமாகத் தொழில்நுட்பத்திற்குள் கொண்டுவர வேண்டும் என்றும், மென்பொருள்கள், செயலிகள் போன்றவை முழுமையாகத் தாய்த்தமிழில் இருக்கும் நிலை வரவேண்டும் என்றும், சொல்வளம் மிக்க தமிழ்மொழியில் பலகோடி சொற்களை நாம் தொகுக்க முடியும் என்றும். அதனை அகரமுதலி இயக்ககம் செய்ய வேண்டும் என்றும்" தெரிவித்தார்.



இப்பயிலரங்கத்தின் 100 அமர்வுகளுக்கும் அறிஞர்கள் ஒருங்கிணைப்பினைச் செய்த, பாரிசு நாட்டைச் சார்ந்த அகராதியியலாளர் பேரா. முனைவர் ச. சச்சிதானந்தம் அவர்கள் வாழ்த்துரை வழங்கும்போது, பயனாளர்கள் யார் என்பதைக் கருத்தில்கொண்டு அவர்களுக்கேற்ற வகையில் அகராதிகள் உருவாக்கப்பட வேண்டும் என்றும், ஒவ்வொரு அகராதியிலும் தலைப்புச்சொல். இலக்கணக்குறிப்பான், பொருள் விளக்கம் ஆகியவை கண்டிப்பாக இடம்பெற வேண்டும் என்றும் தெரிவித்ததோடு, இப்பயிலரங்கத்திற்கான அறிஞர்கள் ஒருங்கிணைப்புப் பணியினைத் தாய்மொழிக்கு ஆற்றும் தலையாயப் பணியாக எண்ணி, பெருமையுடன் செய்துவருவதாகவும்" கூறினார்.



நிகழ்வில் ஊக்கவுரை வழங்கிய, சவுதி அரேபியா மெய்நிகர் அறிவியில் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் மரு.மு. செம்மல் அவர்கள், சென்னை வரும் அனைத்துத் தமிழறிஞர்களும், தமிழார்வலர்களும், அகராதியியலாளர்களும், தமிழுக்கான ஆக்கப்பணியினைச் செய்துவரும் அகரமுதலி இயக்ககத்திற்குக் கண்டிப்பாகச் செல்லவேண்டும் என்றும், ஒரு கலைச்சொல்லை யார், எப்போது வடிவமைத்துத் தந்தார்கள் என்ற விவரம் அடங்கிய கலைச்சொல்லாக்க வரலாறு மிகவும் தேவை என்றும், அதனால் பிறரின் உழைப்பைச் சுரண்டும் அறிவுத் திருட்டை நாம் தடுக்க முடியும்" என்றும் தெரிவித்தார்.



தொடர்ந்து ஊக்கவுரையாற்றிய மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்கள், "அறிவியல் ஆக்கத்திறக்குத் தமிழிலேயே சொல்லாக்கங்களை வழங்குகிற வல்லமையும் திறமும் அகரமுதலி இயக்கத்திற்கு உண்டு என்றும், கலைச்சொல்லாக்கங்களை வழங்குவோரை நயத்தகு நாகரிகத்தோடு வரவேற்று, ஊக்குவித்து, சீராக்கம் செய்து நெறிப்படுத்தும் இவ்வியக்ககத்தின் செயல்பாடு தம்மைப்போல் பலருக்கும் ஊக்கமளித்துவருவதில் மாற்றுக்கருத்து இருக்காது என்றும், நிலவில் தரையிரங்கிய சந்திராயன் – 3இன் வெற்றியைப் போல, தாய்த்தமிழின் சொல்வள மேம்பாட்டை முன்னெடுக்கும் இக்கலைச்சொல்லாக்கப் பயிலரங்கின் 100ஆவது அமர்வும் நம் எல்லோருக்கும் பெருமைமிகு மகிழ்ச்சியைத் தரக்கூடியதே" என்று தெரிவித்தார்.



கோயம்புத்தூரைச் சேர்ந்த வணிகவியல் துறை முன்னைப் புல முதன்மையர் முனைவர் பேரா. மாதரி மாணிக்கம் அவர்கள் தம் மகிழ்வுரையில், "தான் உருவாக்கிய கலைச்சொல்லாக்கங்கள் தம் மாணவர்களுக்கு மட்டும் பயன்பட்டு, தம்முடைய நூலளவிலேயே முடங்கிவிடாமல், இன்றை தலைமுறையினருக்கும் பயன்படுவதற்குச் சொற்குவையும், இந்தக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கமும் களம் அமைத்துக் கொடுத்ததாகத்" தெரிவித்தார்



அடுத்ததாக மகிழ்வுரை வழங்கிய ஆங்காங் நாட்டுத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கத் தலைவர் முனைவர் மெய். சித்ரா அவர்கள், "இப்பயிலரங்கில் தாம் பங்கேற்கத் தொடங்கிய நாள் முதல் சொற்குவை வலைத்தளத்தைப் பயன்படுத்தாத நாளே இல்லை என்றும்,தம்முடைய ஆய்வுக்குச்



சொற்குவையும் இக்கலைச்சொல்லாக்கப் பயிலரங்கமும் பெரிதும் துணையாக இருப்பாதாகவும்" தெரிவித்தார்.

அவரைத்தொடர்ந்து மகிழ்வுரை வழங்கிய, பாரிசு நாட்டைச் சேர்ந்த டிவைன் இந்தியா நிறுவனத்தின் இயக்குநர் பொறிஞர் பத்மப்ரியா இராகவன் அவர்கள், "தாம் பயின்ற தொழில்நுட்பக் கல்லூரியில் தற்போது பயிலும் மாணவர்களுக்குத் தம்முடைய நண்பர்கள் வழியாக, இந்தக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளின் காணொலிகளை அனுப்பி வைப்பதாகவும், அதனைப் பார்த்துப் பயன்பெற்ற சிலர் தங்களின் பாடப் புரிதலுக்கு இக்கலைச்சொற்கள் மிகவும் உதவியாக இருப்பதாகத் தெரிவித்தனர் என்றும், பல இலக்கங்களில் சம்பளம் பெறுவதை விட அந்த மாணவர்களின் கருத்துத் தமக்கு மனநிறைவைத் தருவதாகவும், இதனைத்தான் அகரமுதலி இயக்ககச் சொற்குவையின் வெற்றியாகத் தாம் கருதுவதாகவும்" தெரிவித்தார்.



பயிலரங்கின் 100ஆவது அமர்வில் வெளிநாட்டு அறிஞர்கள் என்ற வகையில், பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனத்தின் நிருவாக இயக்குநர் திருமதி ஞானா பியாற்றிஸ், மயாமி, அமெரிக்காவிலுள்ள ஃப்ளோரிடா பன்னாட்டுப் பல்கலைக்கழக நுண்ணுயிரியல் (ம) தொற்றுநோய்த்துறைப் பேராசிரியர் முனைவர் க. கலைமதி, இலங்கை, யாழ்ப்பாணம் போதனா மருத்துவமனையின் மருத்துவ அருங்காட்சியகம் (ம) தொலை மருத்துவப் பிரிவின் வளர்ச்சிப்பணி அலுவலர் திரு. பா. துவாரகன் ஆகியோர் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினார்கள்.

உள்நாட்டு அறிஞர்கள் என்ற வகையில், சென்னை, காது-மூக்கு-தொண்டை அறுவை சிகிச்சை வல்லுநர் மரு. ஆ. செந்தில் வடிவு , புதுச்சேரி. தாக்கூர் அரசு கலை அறிவியல் கல்லூரியின் மேனாள் முதல்வர் முனைவர் நா. இளங்கோ ஆகியோர் கலைச்சொற்களை வழங்கி உரையாற்றினார்கள்.

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

### திருமதி ஞானா பியாற்றிஸ்



Culture Vulture – பண்பாட்டுப் பற்றாளர்
Malvertising – அழிமிவிளம்பரம்
Fear monger – அச்சமூட்டி

### பேரா. முனைவர் க. கலைமதி



Metaproteomics – முழுபுரதத்தொகுப்பாய்வு
Metagenomics – முழுமரபணுத் தொகுப்பாய்வு
Biome – சூழல் உயிரிக்குழுமம்

### திரு. பா. துவாரகன்



Beveling cutter – சரிவு வெட்டி
Blocking foil – பதிப்பு மென்றகடு
Kangaroo jump – பைமா பாய்ச்சல்

### மரு. ஆ. செந்தில் வடிவு



Supra Glottis – குரல்வளை புகுவழி / மேல் குரல்வளை
Epiglottis – குரல்வளை முகப்பு
Vocal Cord Polyp – குரல்நாண் இழைமக்கட்டி

### முனைவர் நா. இளங்கோ



Motif – கதைக்கூறு
Mysticism – நுண் இறையியல்
Versification – செய்யுளாக்கம்

25.08.2023ஆம் நாள் வரை 100 அமர்வுகள் நடைபெற்றுள்ளன. இதுவரையிலான 100 அமர்வுகளில், பாரிசு, நார்வே, மலேசியா, கனடா, அமெரிக்கா, சிங்கப்பூர், ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, செருமனி, தாய்லாந்து, மொரிசியசு, இலங்கை, நியூசிலாந்து. கொரியா, சப்பான், துபாய், ஓமன், குவைத், தைவான். பின்லாந்து, மியான்மர்,

டென்மார்க், அயர்லாந்து, ஆங்காங், சுவீடன், சவுதி அரேபியா உள்ளிட்ட பல்வேறு நாடுகளைச் சேர்ந்த 276 அயலக அறிஞர்களும், உள்நாட்டிலிருந்து 170 அறிஞர்களும் என மொத்தம் 446 அறிஞர்கள் கலந்துகொண்டு 9,581 தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்துள்ளனர். இக்கலைச்சொற்கள் சீராய்வுக்குப்பின் சொற்குவைவலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுவருகின்றன.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள், அகரமுதலி இயக்கக அலுவலர்கள் (ம) பணியாளர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொல்லாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.



அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநரும் அகராதியியலாளருமான முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்தி அவர்களும் மேற்கொள்கின்றனர்.







சவுதி அரேபியா, மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் பேரா. மரு. மு. செம்மல் அவர்கள் இணையவழிப் பயிலரங்கத்திற்கான தொழில்நுட்ப உதவியினை வழங்கிவருகிறார்.



தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா.பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொள்கின்றனர்.



100ஆவது அமர்வை அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்தி நெறியாளுகை செய்ய. நிறைவில் தொகுப்பாளர் திருமதி ஜெ. சாந்தி நன்றி கூறினார்.



.................................

## மயங்கொலிச் சொற்கள்

**பல்லி**

1. பல்லையுடையவள்
2. சுவரில் ஊர்ந்து செல்லும் சிற்றுயிரி
3. பூடுவகை ,

"சிறுவெண் பல்லிபோல" (புறம். 256)

**பள்ளி**

1. கல்வி கற்குமிடம்
2. படுக்கை

(பள்ளிகொண்ட பெருமாள்)

3. உறக்கம்
4. பள்ளிவாசல்
5. முனிவர் இருப்பிடம்
6. சமண, பௌத்த கோவில்கள்
7. பணிக்களம்
8. மக்கள் படுக்கை
9. வேலைக்களம்
10. சிற்றூர், "கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால்"

(குறள். 840)

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

" வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளிவுறுத்தும் படங்களொடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்!"

– பாவேந்தர் பாரதிதாசன்

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 99–102 வரையிலான அமர்வுகள் 2023 ஆகத்து 18, 25, செபுதம்பர் 01, 08 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 18.08.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. முனைவர் க. கலைமதி**
நுண்ணுயிரியல் (ம) தொற்றுநோய்த் துறை,
ஃப்ளோரிடா பன்னாட்டுப் பல்கலைக்கழகம்,
மயாமி, அமெரிக்கா





**திரு. த. சுதாகரன்**
வழக்கறிஞர், பிரான்சு

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா





**முனைவர் ஆ. அரிமாப் பாமகன்**
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி

## 01.09.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்





**முனைவர் பேரா.**
**மாதரி மாணிக்கம்**
முன்னை புல முதன்மையர்,
வணிகவியல் துறை
கோயம்புத்தூர்

**பொறிஞர்**
**உலோ. செந்தமிழ்க்கோதை**
அறிவியல் எழுத்தாளர், சென்னை





**திரு. இரா. நரசிம்மன் (எ)**
**சைபர் சிம்மன்**
தொழில்நுட்ப வலைப்பதிவாளர்,
சென்னை

## 08.09.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. முனைவர் க. கலைமதி**
நுண்ணுயிரியல் (ம)
தொற்றுநோய்த்துறை,
ஃப்ளோரிடா பன்னாட்டுப்
பல்கலைக்கழகம்,
மயாமி, அமெரிக்கா



**பொறிஞர்**
**உலோ. செந்தமிழ்க்கோதை**
அறிவியல் எழுத்தாளர், செருமனி



**திரு. தி. இரவீந்திரன்**
தகவல் தொழில்நுட்பவியலாளர்,
செருமனி



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

## பேரா. முனைவர் க.கலைமதி

| | |
|---|---|
| Genomics | – மரபணுத் தொகுப்பாய்வு |
| Transcription | – மரபணு மறுக்குறித்தல் |
| Infectious Disease | – நுண்ணுயிரினப்பிணி |

## மரு. விக்டர் ஜோன் பிகுராடோ

| | |
|---|---|
| Turf | – வீச்சுப்புற்களம் |
| Matting | – களப்பாய் |
| Walking Rhythm | – நடைதாளம் |

## திரு. த. சுதாகரன்

| | |
|---|---|
| Fraud by false presentation | – தவறான தகவலால் மோசடி செய்தல் |
| Making off without payment | சட்டக் கடப்பாட்டுப் பணம் செலுத்தத் தவறுதல் |
| Fraud abuse of position | – அதிகாரத்தின்பேரில் மோசடி செய்தல் |

## முனைவர் ஆ. அரிமாப் பாமகன்

| | |
|---|---|
| Bakery | – வேகறை |
| Password | – அடையாண் கிளவி |
| Tablet | – கணினில் |

## முனைவர் மெய். சித்ரா

| | |
|---|---|
| Humisol | – பயிர்எச்சமண் |
| Entisol | – இளகனிமமண் |
| Apedal | – கட்டியாகாமண் / கட்டாமண் |

## பெறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை

| | |
|---|---|
| Orbit raising | – வட்டணை உயர்த்தல் |
| Dwarf Planet | – கோள் குறளி |
| Spacecraft Graveyard | – விண்கலக் கல்லறை |

## முனைவர் பேரா. மாதரி மாணிக்கம்

| | |
|---|---|
| Ethereum (ETH) | – மின் எண்ணிம நாணயம் |
| Lite coin (LTH) | – மின் இலகு நாணயம். |
| Doge coin | – மின் நிலவு நாணயம் |

## திரு. இரா. நரசிம்மன் (எ) சைபர் சிம்மன்

| | |
|---|---|
| Deepfake | – ஆழ்பொய் நுட்பம் |
| ImageNet | – உருவவலை |
| Large Languate Model (LLM) | – மொழிபெரும் தொகுப்பு |

## பேரா. முனைவர் க. கலைமதி

| | |
|---|---|
| Antibiotic Resistance | – நுண்ணுயிரிகளின் எதிர்ப்பாற்றல் |
| Antibiotic – fed | – கொல்லிகள் ஊட்டிய |
| Antibiotic literacy | – கொல்லிகள் கல்வியறிவு |

## திரு. தி. இரவீந்திரன்

| | |
|---|---|
| Lagom | – மிகச்சரி |
| Ressentiments | – மனக்கசப்பு |
| Deja vu | – முன்கண்ட உணர்வு |

## பொறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை

| | |
|---|---|
| Launch Window | – ஏவுதல் சாளரம் |
| Soft Landing | – மென் தரையிறக்கம் |
| Thruster | – உந்துபொறி |

## மூத்த முதன்மொழி தமிழ்!

*எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை.*
*உலகின் மிகப் பழைமையான மொழி தமிழ்.*
*மிகச் செறிவேறிய மொழி தமிழ்.*
*அளவுக்கு மீறிய கட்டுக்கோப்புடைய மொழி தமிழ்.*
*மொழிகளுள் மூத்த முதன்மொழி தமிழ்.*

– முனைவர் இராபர்ட்டு கால்டுவெல்